உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருச்சாய்க்காடென்னும்

# சாயாவனபுராணம்.

திருக்கயிலாயபரம்பரைத்
தருமபுராதீனவித்துவானும்
கார்காத்தவேளாண் மரபினருமாகிய
**கவிராஜநாயகம்பிள்ளையவர்கள்**
இயற்றியது.

இஃது
பெருந்தோட்டம்
**தெ. சி. துரைசாமிப்பிள்ளையால்**
பரிசோதித்து

சிதம்பரம்
ஷண்முகசுந்தரவிலாச அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1909ல் ஜூலைமீ 8உ

# சிறப்புப்பாயிரம்.

## சிதம்பரம்

சிவகதாப்பிரசங்கரத்நாகரம்

**சி. அய்யாக்கண்ணு ஓதுவாமூர்த்தியவர்கள் இயற்றிய**

**அறுசீரடியாசிரியவிருத்தம்.**

உனத்தமதாளடியவர்கட்கருண்முக்கட்பெருமானுறையுஞ்சாயா
வனத்தருமான்மியமதனைக்கவிராசநாயகப்பேர்வள்ளல்செந்தே [கோர்
னெனததிகழ்தீந்தமிழ்ப்பாவாலியற்றினன்முன்னதனையச்சிலியற்றிமிக் [ல்
மனத்தெழுஞ்சீர்ப்பெருந்தோட்டத்துறைதுரைசாமிப்புலவன்வழங்கினனே

---

## சிதம்பரம்

சைவப்பிரகாசவித்தியாசாலைத் தலைமை யுபாத்தியாயர்

ம க. வேற்பிள்ளையவர்கள் குமாரர்

**மகாலிங்ககவிராசரவர்களியற்றியது.**

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருந்தருளம்பரமருமையுடனுறை சாயாவனப்பேர்திகழுந்தெய்வப்
பெருந்தலமான்மியமதனைக்கவிராசநாயகப் பேர்ப்பெருமானுய்வைத் [க்
தருந்தமிழினமிழ்தமெனச்சாற்றின னூற்பெருந்தோட்டத்தலன்சார்சைவ
குருந்துதுரைசாமியச்சிற்பதித்தெவரு மெளிதுணரக்கொடுத்திட்டானே.

# திருச்சாய்க்காடு

# திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் தேவாரம்.

பண்—இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

நித்தலுநியமஞ்செய்துநீர்மலர்தூவிச்
சித்தமொன்றவல்லார்க்கருளுஞ்சிவன்கோயின்
மத்தயானையின்கோடும்வண்பீலியும்வாரித்
தத்துநீர்ப்பொன்னிசாகரமேவுசாய்க்காடே. (௧)

பண்டலைக்கொண்டுபூதங்கள்பாடநின்றாடும்
வெண்டலைக்கருங்காடுறைவேதியன்கோயில்
கொண்டலைத்திகழ்பேரிமுழங்கக்குலாவித்
தண்டலைத்தடமாமயிலாடுசாய்க்காடே.

நாறுகூவிளநாகிளவெண்மதியத்தோ
டாறுசூடுமமரர்பிரானுறைகோயி
லூறுதேங்கனிமாங்கனியோங்கியசோலைத்
தாறுதண்கதலிப்புதன்மேவுசாய்க்காடே. (௩)

வரங்கள்வண்புகழ்மன்னியவெந்தைமருவார்
புரங்கண்மூன்றும்பொடிபடவெய்தவன்கோயி
லிரங்கலோசையுமீட்டியர்சரக்கொடுமீண்டித்
தரங்கநீள்கழித்தண்கரைவைகுசாய்க்காடே.

ஏழைமார்கடைதோறுமிடுபலிக்கென்று
கூழைவாளரவாட்டும்பிரானுறைகோயின்
மாழையொண்கண்வளைக்கைநுளைச்சியர்வண்பூந்
தாழைவெண்மடற்கொய்துகொண்டாடுசாய்க்காடே.

துங்கவானவர்சூழ்கடறாங்கடைபோதி
லங்கொர்நீழலளித்தவெம்மானுறைகோயில்
வங்கமங்கொளிரிப்பியுமுத்துமணியுஞ்
சங்கும்வாரித்தடங்கடலுந்துசாய்க்காடே.

வேதநாவினர்வெண்பளிங்கின்குழைக்காத
ரோதநஞ்சணிகண்டருகந்துறைகோயின்
மாதர்வண்டுதன்காதல்வண்டாடியபுன்னைத்
தாதுகண்டுபொழின்மறைந்தூடுசாய்க்காடே. (எ)

இருக்குநீள்வரைபற்றியடர்த்தன்றெடுத்த
வரக்கனைநெரித்தருள்செய்தவன்கோயில்
மருக்குலாவியமல்லிகைசண்பகம்வண்பூந்
தருக்குலாவியதண்பொழினீடுசாய்க்காடே. (அ)

மாலினோடயன்காண்டற்கரியவர்வாய்ந்த
வேலையார்விடமுண்டவர்மேவியகோயில்
சேலினேர்விழியார்மயிலாலச்செருந்தி
காலையேகனகம்மலர்கின்றசாய்க்காடே. (௯)

ஊத்தைவாய்ச்சமண்கையர்கள்சாக்கியர்க்கென்று
மாத்தமாகவறிவரியாயவன்கோயில்
வாய்த்தமாளிகைசூழ்தருவண்புகார்மாடே.
பூத்தவாவிகள்சூழ்ந்துபொலிந்தசாய்க்காடே (௧௦)

ஏனையோர்புகழ்ந்தேத்தியவெந்தைசாய்க்காட்டை
ஞானசம்பந்தன்காழியர்கோனவில்பத்து
மூனமின்றியுரைசெயவல்லவர்தாம்போய்
வானநாடினிதாள்வரிம்மாநிலத்தோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

பண்—சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மண்புகார்வான்புகுவர்மனமிளையார்பசியாலுங்
கண்புகார்பிணியறியார்கற்றாருங்கேட்டாரும்
விண்புகாரெனவேண்டாவெண்மாடநெடுவீதித்
தண்புகார்ச்சாய்க்காட்டெந்தலைவன்றாள்சார்ந்தாரே. (௧)

போய்க்காடேமறைந்துறைதல்புரிந்தானும்பூம்புகார்ச்
சாய்க்காடேபதியாகவுடையானும்விடையானும்
வாய்க்காடுமுதுமரமேயிடமாகவந்தடைந்த
பேய்க்காடல்புரிந்தானும்பெரியோர்கள்பெருமானே. (௨)

நீநாளுநன்னெஞ்சேநினைகண்டாயாரறிவார்
சாநாளும்வாழ்நாளுஞ்சாய்க்காட்டெம்பெருமாற்கே
பூநாளுந்தலைசுமப்பப்புகழ்நாமஞ்செவிகேட்ப
நாநாளுநவின்றேத்தப்பெறலாமேநல்வினையே. (௩)

கட்டலர்த்தமலர்தூவிக்கைதொழுமின்பொன்னியன்ற
தட்டலர்த்தபூஞ்செருந்திகோங்கமருந்தாழ்பொழில்வாய்
மொட்டலர்த்ததடந்தாழைமுருகுயிர்க்குங்காவிரிப்பூம்
பட்டினத்துச்சாய்க்காட்டெம்பரமேட்டிபாதமே. (௪)

கோங்கன்னகுவிமுலையாள்கொழும்பணைத்தோட்கொடியிடையைப்
பாங்கென்னவைத்துகந்தான்படர்சடைமேற்பான்மதியந்
தாங்கினன்பூம்புகார்ச்சாய்க்காட்டான்றணிழற்கீ
ழோங்கினரோங்கினரெனவுரைக்குமுலகமே. (ரு)

சாந்தாகநீறணிந்தான்சாய்க்காட்டானகாமனைமுன்
றீந்தாகமெரிகொளுவச்செற்றுகந்தான்றிருமுடிமே
லோய்ந்தாரமதிசூடியொளிதிகழுமலைமகடோ
ளேய்ந்தாகம்பாகமாவுடையானும்மிடையானே. (சு)

மங்குறோய்மணிமாடமதிதவழுநெடுவீதிச்
சங்குலாங்கரைபொருதுதிரைபுலம்புஞ்சாய்க்காட்டான்
கொங்குலாவரிவண்டினிசைபாடுமலர்க்கொன்றைத்
தொங்கலானடியார்க்குச்சுவர்க்கங்கள்பொருளலவே. (எ)

தொடலரியதொருகணையாற்புரமூன்றுமெரியுண்ணப்
படவரவதெழிலாரம்பூண்டான்பண்டரக்கனையுந்
தடவரையாற்றடவரைத்தோளூன்றினான்சாய்க்காட்டை
யிடவகையாவடைவோமென்றெண்ணுவார்க்கிடரிலையே. (அ)

வையநீறேற்றானுமலருறைவுநான்முகனு
மையன்மாரிருவர்க்குமளப்பரிதாலவன்பெருமை
தையலார்பாட்டோவாச்சாய்க்காட்டெம்பெருமானைத்
தெய்வமாப்பேணாதார்தெளிவுடைமைதேறோமே. (கூ)

குறங்காட்டுநால்விரற்கோவணத்துக்கோலோவிப்போ
யறங்காட்டுஞ்சமணருஞ்சாக்கியருமலர்தூற்றுந்
திறங்காட்டல்கேளாதேதெளிவுடையீர்சென்றடைமின்
புறங்காட்டிலாடலான்பூம்புகார்ச்சாய்க்காடே. (கo)

நொம்பைந்துபுடைத்தொல்குநூபுரஞ்சேர்மெல்லடியா
ரம்பந்தும்வரிக்கழலுமரவஞ்செய்பூங்காழிச்
சம்பந்தன்றமிழ்பகர்ந்தசாய்க்காட்டுப்பத்திவையு
மெம்பந்தமெனக்கருதியேத்துவார்க்கிடர்கெடுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்—திருநேரிசை. பண்—கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

தோடுலாமலர்கள்தூவித்தொழுதெழுமார்க்கண்டேயன
வ்நாளுலகிற்றென்றுமெய்கொள்வான்வந்தகாலன்
பாடுதான்செல்லவஞ்சிப்பாதமேசரணமென்னச்
சாடினார்காலன்மாளச்சாய்க்காடுமேவினாரே. (க)

# திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்.

வடங்கெழுமலைமத்தாகவானவரசுரரோடு
கடைந்திடவெழுந்தநஞ்சங்கண்டுபல்தேவரஞ்சி
யடைந்துநுஞ்சரணமென்னவருள்பெரிதுடையராகித்
தடங்கடனஞ்சமுண்டார்சாய்க்காடுமேவினாரே. (௨)

அரணிலாவெளியநாவலருநிழலாகவீசன்
வரணியலாகித்தன்வாய்நூலினாற்பந்தர்செய்ய
முரணிலாச்சிலந்திதன்னைமுடியுடைமன்னனாக்கித்
தரணிதானாளவைத்தார்சாய்க்காடுமேவினாரே. (௩)

அரும்பெருஞ்சிலைக்கைவேடனாய்விறற்பார்த்தற்கன்று
வுரம்பெரிதுடைமைகாட்டியொள்ளமர்செய்துமீண்டே
வரம்பெரிதுடையனாக்கிவாளமர்முகத்தின்மன்னு
சரம்பொலிதூணியீந்தார்சாய்க்காடுமேவினாரே. (௪)

இந்திரன்பிரமனங்கியெண்வகைவசுக்களோடு
மந்திரமறையதோதிவானவர்வணங்கிவாழ்த்தத்
தந்திரமறியாத்தக்கன்வேள்வியைத்தகர்த்தஞான்று
சந்திரற்கருள்செய்தாருஞ்சாய்க்காடுமேவினாரே. (௫)

ஆமலிபாலுநெய்யுமாட்டியர்ச்சனைகள்செய்து
பூமலிகொன்றைசூட்டப்பொறாததன்றாதைதாளைக்
கூர்மழுவொன்றாலோச்சக்குளிர்சடைக்கொன்றைமாலைத்
தாமநற்சண்டிக்கீந்தார்சாய்க்காடுமேவினாரே. (௬)

மையறுமனத்தனாயபகீரதன்வரங்கள்வேண்ட
வையமிலமரரேத்தவாயிரமுகமதாகி
வையகநெளியப்பாய்வான்வந்திழிகங்கையென்னுந்
தையலைச்சடையிலேற்றார்சாய்க்காடுமேவினாரே. (௭)

குவப்பெருந்தடக்கைவேடன்கொடுஞ்சிலையிறைச்சிப்பாரந்
துவர்ப்பெருஞ்செருப்பானீக்கித்தூயவாய்க்கலசமாட்ட
வுவப்பெருங்குருதிசோரவொருகணையிடந்தங்கப்பத்
தவப்பெருந்தேவுசெய்தார்சாய்க்காடுமேவினாரே. (௮)

நக்திலாமலர்பன்னூறுகொண்டுநன்ஞானத்தோடு
மிக்கபூசனைகள்செய்வான்மென்மலரொன்றுகாணா
தொக்குமென்மலர்க்கண்ணென்றங்கொருகணையிடந்துமப்ப
சக்கரங்கொடுப்பர்போலுஞ்சாய்க்காடுமேவினாரே. (௯)

புயங்களைஞ்ஞான்கும்பத்துமாயகொண்டரக்கனோடிச்
சிவன்றிருமலையைப்பேர்க்கத்திருமலர்க்குழலியஞ்ச
வியன்பெறவெய்திவீழவிரல்சிறிதூன்றிமீண்டே
சயம்பெறநாமமீந்தார்சாய்க்காடுமேவினாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## பண் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வானத்திளமதியும் பாம்புந்தன்னில் வளர்சடைமேலாதரிப்ப வைத்தார்போலுந், தேனைத்திளைத்துண்டு வண்டுபாடுந் தில்லைநடமாடுந் தேவர்போலு, ஞானத்தினொண்சுடராய் நின்றார்போலு நன்மையுந்தீமையுமானார்போலுந், தேனொத்தடியார்க் கினியார்போலுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ் செல்வர்தாமே. (க)

விண்ணோர்பரவ நஞ்சுண்டார்போலும் வியன்றுருத்தி வேள்விக்குடியார்போலு, மண்ணுமலையுறையு மண்ணல்போலு மதியரையமங்கையமர்ந்தார்போலும், பண்ணார்களிவண்டு பாடியாடும் பராய்த்துறையுண் மேயபரமர்போலுந், திண்ணார்புகார் முத்தலைக்குந் தெண்ணீர்த் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ் செல்வர்தாமே. (உ)

கானிரியவேழமுரித்தார்போலுங் காவிரிப்பூம்பட்டினத் துள்ளார்போலும், வானிரியவருபுரமூன்றெரித்தார்போலும் வடகயிலைமலையதுதம்மிருக்கைபோலு, மூனிரியத் தலைகலனா வுடையார்போலு முயர்தோணிபுரத்துறையுமொருவர்போலுந், தேனிரியமீன்பாயுந்தெண்ணீர்ப்பொய்கைத்திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர்தாமே. (ங)

ஊனுற்றவெண்டலைசேர்கையர்போலு மூழிபலகண்டிருந்தார்போலு, மானுற்றகரதலமொன்றுடையார்போலு மறைக்காட்டுக்கோடி மகிழ்ந்தார்போலுங், கானுற்றவாடலமர்ந்தார்போலுங் காமனையுங்கண்ணழலாற்காய்ந்தார்போலுந், தேனுற்றசோலைதிகழ்ந்து தோன்றுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ்செல்வர்தாமே. (ச)

கார்மல்குகொன்றையந்தாரார்போலுங் காலனையுமோருதையாற்கண்டார்போலும், பார்மல்கியேத்தப் படுவார்போலும் பருப்பதத்தேபல்லூழிநின்றார்போலு, மூர்மல்குபிச்சைக்குழன்றார்போலு மோத்தூரொருநாளுநீங்கார்போலுஞ், சீர்மல்குபாடலுகந்தார்போலுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ்செல்வர்தாமே. (ரு)

மாவாய்ப்பிளந்துகந்தமாலுஞ் செய்யமலரவனுந்தாமேயாய்நின்றார்போலு, மூவாதமேனி முதல்வர்போலு முதுகுன்ற மூதூருடையார் போலுங்

# திருநாவுக்கரசுநாயனார் திருத்தாண்டகம்.

காவாயமுனிதன்மேல் வந்தகூற்றைக் குரைகழலாலன் றுகுமைத்தார்போலுந், தேவாதிதேவர்க் கரியார்போலுந் திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர்தாமே. (சு)

கடுவெளியோ டோரைந்துமானார்போலுங் காரோணத்தென் றுமிருப்பார்போலு, மிடிகுரல்வாய்ப்பூதப்படையார்போலு மேகம்பமேவியிருந்தார்போலும், படியொருவரில்லாப் படியார்போலும் பாண்டிக்கொடுமுடியுந் தம்மூர்போலுஞ், செடிபடுநோயடியாரைத்தீர்ப்பார்போலுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ் செல்வர்தாமே. (எ)

விலையிலாவாரஞ்சேர் மார்பர்போலும் வெண்ணீறுமெய்க்கணிந்தவிகிர்தர்போலு, மலையினார்மங்கைமணாளர்போலு மாற்பேறுகாப்பாய் மகிழ்ந்தார்போலுந், தொலைவிலார்புரமூன்றுந் தொலைத்தார்போலுஞ் சோற்றுத்துறைதுருத்தியுள்ளார்போலுஞ், சிலையினார்செங்கணரவர்போலுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ் செல்வர்தாமே. (அ)

அல்லலடியார்க் கறுப்பார்போலு மமருலகந்தம் மடைந்தார்க்காட்சிபோலு, கல்லமுநல்லூரு மேயார்போலு கள்ளாறு நாளும்பிரியார் போலு நல்லமுலைகைநகையாள்பாகர்போலுமுன்னமேதோன்றிமுளைத்தார்போலுந் தில்லைநடமாடுந் தேவர்போலுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ் செல்வர்தாமே. (கூ)

உறுப்புடையவிராவணன் பொன்மலையைக் கையாலூக்கஞ்செய்தெடுத்தலுமேயுமையாளஞ்ச, நிறைப்பெருந்தோளிருபதும் பொன்முடிகள்பத்து நிலஞ்சேரவிரல்வைத்த நிமலர்போலும், பிறைப்பிளவுசடைக்கணிந்தபெருமான்போலும் பெண்ணாணுருவாகிநின்றார்போலுஞ், சிறப்புடையவடியார்கட் கினியார்போலுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ்செல்வர்தாமே. (கO)

திருச்சிற்றம்பலம்.

திருப்பதிகம்—(ச)

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சாயாவன புராணம்.



## பாயிரம்.

### கணபதி - துதி.

இலகுஞ்செஞ்சடைச்சூதரியம்பிய
கலைநிறைந்தசாயாவனக்காதையை
யலகிலன்பொடறைந்திடவைங்கரன்
மலரடித்துணைவாழ்த்திவணங்குவாம்.

### சாயாவனநாதர்.

சீர்பூத்தவெண்ணிலவைத் திரைபூத்த வாநதியைச் செந்தேனூற்று, மார்பூத்த மலரதனைக் கடுக்கையினைச்செஞ்சடிலத்தணியுங்கோவைக், கார்பூத்தமேனியனு மறைபூத்த நாவினனுங்காணு தோங்கு, மேர்பூத்தசின்மயச்சாயாவனத்தெம்மிறையவனையிறைஞ்சல்செய்வாம். (க)

### கூவென்றகோதையம்மை.

தேவர்கண்மன்னிவாழுஞ்செம்பொனுடாளுஞ்சீர்சால்
நாவினுக்கரசன்கோட்டந்தூக்கியகாலந்தன்னிற்
சேவொன்றுமீசர்சாய்க்காட்டிறைவர்க்கென்றீங்கோவென்று
கூவென்றகோதையார்தங்குளிர்மலர்ச்சரணம்போற்றி. (உ)

### விநாயகர்.

பணிப்பிள்ளைமதிநுதற்கூவென்றபைந்தொடிபயந்த
தனிப்பிள்ளைகரடமார்குஞ்சரப்பிள்ளைபவளச்செங்கா
லனப்பிள்ளையூர்திநானுமடியிணைபணியுஞ்சாயா
வனப்பிள்ளைபாதமானமலரிணைசென்னிவைப்பாம். (ங)

### சுப்பிரமணியர்.

சூரனுரங்கிரவுஞ்சங்கிழிபடவைவேல்வாங்கிச்சுரர்கடம்மை
வீரமுடன்சிறைவிடுத்து வாசவன்விண்ணேருலகின் வெற்றியோ

டைப், பேரயிராவதத்துலவச்செய்தெய்வயானைவள்ளிபெருமா னிலைப், பாரமயிலேறிவரு மொருகுமரனிரு சரணம்பணிதல்செ ய்வாம். (ச)

நாமகள்.

செங்கரத்திற்சுவடிச்சிறப்பினள்
கொங்கைமுத்துவடம்புனைகோதையள்
பங்கயத்தனன்றுவுறைபான்மொழி
மங்கைவாணிமலர்ப்பதம்போற்றுவாம். (ரு)

திருநந்திதேவர் அறுபத்துமூவர்.

வேத்திரஞ்செங்கயிற்றாங்கி வெண்பிறையா னுறைகயிலைமீ துவாயில், காத்திருக்குநந்தீசரடியிணைகள் போற்றி மிகக்கனிந்த ஞானம், பூத்தவறிவினராகிப் பத்தியினல்வழிபட்டுப்பொல்லாத் தோற்ற, மாற்றிமுத்திபெறுமந்த வறுபத்துமூவர்பதம் வணக்க ஞ்செய்வாம். (சு)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

திரையேறுங்கடல்புரையு மமணர்குழாங்கழுவேறத்தென்ன ர்வெற்றி, வரையேறவடியருள மகிழ்வேறவேடாற்றின்மருவியே ற, நரையேறுமானேறு மரனுமையா டிருமுலைப்பா லுவினேற, வுரையேறும் பதிகமருள்கவுணியர்கோன்பாதமலருளத்தில்வைப் பாம். (எ)

திருநாவுக்கரசுநாயனார்.

இருமருங்குந் திரைத்தரள முடுக்களென வேவிளங்கியிலங்க மாநீர்ப், பொருகடலின் முகடதனிற்சிலைமிதப்பபுணையெனவே புரிந்துபற்றி, விரிகடலைக்கடந்தானை வேதநெறிசைவநெறிவிள க்கினானை, யருள்பரவுந்திருவாமூரருளிறையையனவரதமகத்து ள்வைப்பாம். (அ)

சுந்தரமூர்த்திநாயனார்.

வெங்கராமதலைதரத்திருப்பதிகம்புனைந்தானைவிளங்கவென் றும்,பொங்கராவணிந்தானைவழக்கேற்றியுரைத்தானைப்புனிதச்சா ந்தா, லங்கராகம்புனைந்தேபரவையுடன் சங்கிலியையணைந்துகோ லைத், துங்கராமமரர்தொழுந்தம்பிரான்றோழனையாந்தொழுதல் செய்வாம். (கூ)

## மாணிக்கவாசகசுவாமிகள்.

தென்னவற்குமந்திரியாய் மெஞ்ஞானவுண்மையெலாந்தெரியவென்று, மன்னுபெருந்துறைக்குருந்தநிழற்கிழவனுபதேசமார்க்கங்கேட்டுத், துன்னுமெழிற் புலியூரிற்கோவைவாசகமுரைத்துத்துகள்சேர்புத்தன், றன்னைமுனம் வாதில்வென்றவாதவூர்த்நாபதர்தாடலைமேற்கொள்வாம். (௧0)

## உருத்திரகணத்தவர் முதலியோர்.

பந்தபாசந்தவிர்க்குமுருத்திரபல்கணத்தவர்தாள் பணிந்துபோற்றி, யெந்தைசைவநிலை நிறுத்துமெய்கண்டா ரிணையடிகளிறைஞ்சிப்போற்றி, கந்துகத்தின்மீதேறிக் கயிலைபுகுஞ் சேரர்பிரான்கழற்றாள்போற்றி, தந்தையிருதாடடிந்தசண்டிசர்புண்டரீகச்சரணம்போற்றி. (௧௧)

## இயற்பகையார்துதி.

கயற்பகைக்கண்ணியாரைக்கைதவப்பனவராய
மயற்பகைச்சிவனார்க்கீந்துமறித்தெதிர்சுற்றத்தோரைப்
புயற்பகைக்கரவாள்கொண்டுபொருதழித்தரன்றாள்புக்க
வியற்பகைமுனிவர்பொற்றாளிறைஞ்சிவல்வினைகடீர்ப்பாம் (௧௨)

## கற்பினுக்கரசியார்துதி

வெற்பினுக்கரசிபொற்றோள்விழைமதிவேணிப்பெம்மான்
பொற்பினுக்கரசியாநம்பொன்னினைத்தருதியென்ன
வற்பினுக்கரசிபோவென்றியற்பகையளிக்கப்போந்த
கற்பினுக்கரசிபொற்றாள்கைதொழுதிறைஞ்சல்செய்வாம். (௧௩)

## பட்டினத்துச்சுவாமிகள்.

அளகையர்கோன்செல்வநிகர்தமதுசெல்வங்கனவெனவேயகத்திலுன்னிப், பளகறுக்கு மெஞ்ஞானத்தாற்றுறந்து திருவிசைப்பாப்பகர்ந்துகஞ்சங், களமருவுமாரூரர்மும்மணிக்கோவையுமருளிக்கவின் பெற்றோங்கும், வளமிகுந்தபூம்புகார்ப்பட்டினத்துப்பிள்ளைபதம்வழுத்துவாமே. (௧௪)

## அகத்தியமுனிவர்.

வாதாவில்வலனைமாய்த்துவிந்தமலையினதுவலியடக்கி, யாதாரத்தமிழ்க்கதிரானுலக மெலாமொளிபரப்பி யருள்மிகுந்தோ, தா

தாருநறுமலர்ச் சந்தனப் பொதிகைத்தடவரையிற் றானுறைந்தே, நாதாந்தமுணர் கும்பமுனிவனடிதொழுதிதனைநவிலுவேனே. ( )

### கஞ்சனூர்ச்சிதம்பரதேசிகர்.

செந்திருவாழ்கஞ்சனூர் தன்னில்வாழுந்திருமறையோர்குலத்துதித்துச்சேரும்பாச, பந்தவினையகற்றியருட்பார்வைபார்த்துப்பகர்ஞானமந்திரத்தையுபதேசித்தே, யந்தமுத்திநெறிகாட்டியென்னையாளுமந்தணனு ராகமத்தின்வழியேயிற்போ..., சிந்துரத்தையுரித்தபிரானடியைப்போற்றுஞ்சிதம்பரதேசிகர் திருத்தாள்சென்னிசேர்ப்பாம். (கசு)

### * தருமைச்சிவஞானதேசிகர்.

மருவளருமிதழியந்தார் வேணிதனில் வனைந்தானை மனத்திலுன்னுங், கருணைபொழிமுகத்தானைக் கண்டிகையையணிந்தானைக் காட்சியானை, யிருவினையைத்தடிந்தன்பர்க்கெழின்ஞானவுபதேசமியற்றுவானைத், திருவளருந்தருமபுரச் சிவஞானதேசிகனைச்சிந்தைசெய்வாம். (கஎ)

### வாழ்த்து.

கடவுளருமறையவருங்கருதுசிவாகமத்தினரும்
விடமணிந்தானடியவருமேன்மேலும்விளங்குகவிப்
படிபுரக்குமன்னவரும்பசுங்குடியுந்தழைத்தோங்க
நெடியமுகின்மழைபொழிகநீதிநெறிநிலவுகவே. (கஅ)

சிறந்தருள்சாயாவனத்தர் திருமேனிதனைத்தீண்டு
நிறைந்தமறையோர்குலமுநீணகருந்தழைத்தோங்க
அறந்தருளம்பலவாணமுனிதொகுத்த திருப்பணியுந்
திறந்தருமெய்த்தானிகருஞ்செல்வமுடன்றழைத்தோங்க. (கசு)

### சிறப்புப்பாயிரம்.

புண்ணியமோர்வடிவானோன் றொண்டைவளநாடன்புகலுங்கீர்த்தி
நண்ணுமெழிற்பாகையினனுலகாளும் ராமலிங்கராயன்மிக்க
வண்ணாலசாயாவனத்தர்தலமகிமைதமிழ்க்கவியாலறை யென்றேத
வெண்ணருஞ்சீர்க்காரூரன்கவிராசநாயகன்றானியம்பினனால்.

### அவையடக்கம்.

செந்தமிழ்நூற்புலவர் பலர்யாப்புத்தோறுஞ்சிறப்பின்மைத னோக்கித்தியங்காவண்ண, முந்தவுரைத்திடுமெழுத்து மசையுஞ்

சீருமுநன்மைபெறுபந்தமடிதொடையின் குற்றம், வந்தவகையு
மிசெய்யலெதுகைமோனை வழுக்கள்பொருணலமிலதாய்வைத்த
ருவ, மிந்தவகைக்குற்றமெலாமெளிதிற் காணவிலக்கியமாவதற்
கிதனையியம்புகேனே. (உக)

கறையணிமிடற்றர்சாய்க்காட்டினற்கதை
யறிவிலேனமிழ்துநேர்தமிழின்யாக்குதல்
செறிதிரைமுழக்கறுத்தேனின்வாரியோர்
பொறிவரிவண்டுணைப்புக்கதாமரோ. (உஉ)

மாடமாளிகையுயரங்குவளர்சிறுரொருங்குகூடி
நீடியதரையிற்கீறிற்றபதியர்நிந்திப்பாரோ
பீடுநூலுணர்ந்திடாதபேதையேன்பேசபுன்சொற்
றேடியேபொருளாராய்நதுதெரிநதவர்முனிநதிடாரே. (உங)

முகில்சொரிந்திடுநீர்யாவர்முன்றிலிற்றுறுற்றுலும்
பகிரதிசேரின்முத்திபலித்திடுந்தீர்த்தமாகும்
வகையறியாதவென்சொன்மருவுநூறுறுதுந்தேர்ந்த
மிருதமிழ்ப்புலவர்பாலிற்சென்றிடினமிக்கதாமே. (உச)

மருவுபர்பூவினுர்போல்வளர்சுவைப்பாலுணீர்போற்
பொருளறியாதவென்றன்புன்சொலும்புகலின்முன்னுட்
கருதலர்புரமூன்றெய்தகடவுள்சாயாவனேசர்
சரிதமேவுறலாலான்றோர்தள்ளிடார்தழுவுவாரே. (உரு)

## நூல்வரலாறு.

செப்பரியவீரொன்பான் புராணந்தன்னிற் றிகழ்கந்தபுரா
ணத்திற்சிறப்பாயோங்கு, மொப்பிலாச்சங்கிதை கண்மூவிரண்டி
லுயர்வுமிகுசங்கரசங்கிதையிலோது, மிப்பதியின்சிறப்பையெல
மிங்குளோர்களியப்புகலின்றமிழ்க்கவியாலென்னபானு, மப்பெ
ரியோர்மொழி சிரமேற்கொண்டுசாயாவடவியர்தாணினைந்துறுதி
யடைவமென்று. (உசு)

சீர்பெறுசாயாவனத்தினிலக்கணமு நகர்ச்சிறப்புஞ்சிவனர்
மேவும், பேர்பெறுபீடிகை மகவான்வைத்ததும் பூசித்ததும்பின்
பெயர்க்குமாறுங், கூர்பெறுநான்மருப்பிபதீர்த்தமுந்திருநாட்சிற
ப்புமியற்பங்கயர்கொண்ட, வேர்பெறுநற்றிருத்தொண்டுஞ் சங்
கமுகதீர்த்தமுமாயிசைக்கலுற்றேன். ()

## சாயாவனசருக்கம்.

பொன்னாருமாலயனும் வாசவனும் புராந்தகன் பொற்பாதம் பூணு, மின்னாருஞ்செஞ்சடில முனிவரருமனுதினமும் விரும்பிப் போற்றத், தென்னாரும் பொன்னிநதி வடபாலிலெந்நாளுஞ் சிறந்துவாழும், பன்னகபூடணர் சாயாவனத்தின்பெருமைதனைப்பகர லுற்றேன். (க)

வேறு.

தெண்டிரைவெண்டரளங்கள் கொழித்திடு கோமதிநதியின் செழுந்தீரத்தின், மண்டுவிரைச்சந்துசெறிவனஞ் சூழுமிடமரியுங்கரியுநண்பு, கொண்டுமருவிடமென்தளுனன்று மகத்திகழுமிடங் கோதிலாத, வண்டவராமுனிவர் பயிலிடமாகுநைமிசாரணியந் தன்னில். (உ)

பாசடைகணெருங்குவன்னித் தருநிழற்கீழ்ச்சவுனகரும்பரத்தைநாடுங், காசிபரும்வதிட்டரொடு வியாசர்புலத்தியர் பிருகு கபிலர்பந்த, பாசவினைதனையகற்றுங்கோதமர் நாரதர்மரிசிபகர் வான்மீகர், மாசகலுமனைவியரோடியாகசாலையுஞ்சமைத்துமகிழ்ந்துசார்ந்தார். (ங)

அந்தமுனிவரர்வேள்வி யனைத்துமுடித்துவகையுடனமர்ந்தபின்னர், வந்தருளுஞ்சூதரைபோராசனத்திலிருத்திமிகமகிழ்ச்சிகூர்ந்தே, கந்தமலர்க்கழலிணையைப்போற்றியருக்கியங்கொடுத்துக்கருணைமிக்கீர், சந்ததமும் யாங்களுய்யச் சகலபுராணங்களுமுன்சாற்றினீரால். (ச)

அளவைதனக்கெட்டாத மறைவகுத்த மாமுனிவனன்பினாலே யுளமகிழவுமக்குரைத்தவறுமூன்றுபுராணத்து ளுயர்காந்தத்தில் வளமுறவேயுரைத்தருளுஞ்சங்கரசங்கிதையதனின்வையமாதின் பளகின்மதிமுகச்சாயாவனமகிமைவிரித்தின்னும்பகர்கவென்றார்.

என்றவருந்தவரைமிகமுகநோக்கிச்சூதமுனியினிதுகேண்மினின்னன்றிதருமத்தலத்தின்பெருமையொருகாற்கேட்பினுவாற்சொல்றுன்றுபவக்கடல்சுவறுமட்டமாசித்தியொடுசுகம்வந்தெய்தும் வென்றிதருசாலோகமுதனான்குபதவிகளுமேவுந்தானே. (டு)

அடுக்குமெழிற்காமியற்குக்காமியமுந் தருமமதையன்பினாலே, தொடுக்கவென்னவிரும்பினர்க்குப் புண்ணியமுநித்தியத்தைத்

தொடங்கினோர்க்குக், கொடுக்குமிக நித்தியமும் வீட்டுநெறி விரும்பினர்க்குக் கொடுக்கும் வீடும், கடுக்கையணி வேணியர்சாயாவனத்தின் பெருமையெவர்கழறவல்லார். (எ)

சந்தனஞ்சேர்புயவளவனரசுரிமை செலுத்திடலாற் றழைத்தகொண்மூ, வந்துவந்துதிங்கடொறு மும்மாரிபொழிந்திடவே வளம்பெற்றோங்கிச், செந்தமிழ் நன்மனைகடொறு முழங்குமெழிற் சோணாட்டிற் சிறப்புநல்கும், நந்துலவுங்காவிரிக்குவடபாலி லெழுவனங்கணண்ணுமாதோ. (அ)

பதங்கனொளிவிடுமுலகின் முந்துவனம் பவனமெறி செவிகளுல்வாய், நிதங்கமழு மதக்கரடக்கிம்புரிக்கோட்டணிபுழைக்கைநீள்வெள்ளானை, சதங்கைமணி கலகலெனவந்திறையைப்பூசித்துத்தனிவீடெய்து, * மதங்கவனமா மதனைத்தரிசித்தோர்பவக்குறும்பைமாற்றுவாரே. (கூ)

நீலநிறப்பசுந்தோகை மயிற்சாயற்புயற்கூந்த னிகழ்வேற்பார்வைக், கோலவரிவளைக்கைதிகழ்கும்பமுலையுமைபாகர் கொண்டன்மேனி, வேலைதனிற் றுயினெடியோனனலூர்தி தேடரியவிமலர் மேவுந், தாலவனமொன்றுளதங்கதைத்துதிப்போர் மும்மலமுந்தவிர்குவாரே. (கo)

பிறையணியுஞ்சடைமுடியார் மழுவேற்றார் வெண்பொடியார் பிறங்குமாலக், கறையணியுமணிமிடற்றார் உமையிடத்தார் கூற்றுதைத்தார் கடிசேர்கொன்றை, நிறையலங்கன் மார்பகத்தார்சிவலோகநாயகராநிமலர்மேவு, நறைவளர்பூம்புன்கவன மொன்றுளது தருமமெலாநல்குந்தானே. (கக)

ஆதிசிதம்பரம் ஞானவனங்காலாஞ் சரம்வெள்ளையனத்தோன் போற்று, நீதிவனநல்லவனம்பாலிக்குந்தருமவனநிகமவேள்வி, மாதவர்கணெருங்குவனஞ் சீதவனப்பொன்னி யிருமருங்குஞ்சூழுஞ், சோதியுறைசுவேதவனமொன்றதனைத்துதிக்குமுத்திசொல்லுங்காலே. (கஉ)

விற்பொலியுநுதன்மதர்க்கண் வெண்ணகைச்செந்துவர்திகழ் வாய்வின்ரமென்கூந்தற், பொற்புடையாளிடப்பாகர்க்குதவுமாதுதிப்புகைவான்வொலிந்தபோதிற், பற்பலமாமலர்ச்சோலையிடத்

* மாதங்க வனமென்பது மதங்கவனமென்றாயிற்று—இத்தலம் பெருந்தோட்டமெனவழங்கும்,

தின்முகிலெனமஞ்ஞைநுபரந்துலாவுந், தற்பரனூர்மகிழவனந்தொ
ழுவார்கள்பரகதியைச்சார்வாரன்றே, (கரு)

நிரைநிரையாயிரதமெனநடந்துவருமரக்கலத்தைநீரிற்பாய்ந்து
வரையெறியுஞ்சண்முகத்தோனயில்போலவேவிளங்குமகரமச்சங்
கரைசெறியவேதகர்த்துவிளையாடவொலிபொங்கிக்கதறுமாழி
திரையெறியுமுல்லைவனந்தெரிசித்தோர்பரிசுத்தச்செல்வராவார்.

மடலவிழ்செங்கமலமலிபொன்னிநதிபாய்ந்திடலானமகிழு
தான்மிக், குடையநீரலைநிறைந்துவரைநிரைகள்போல வுயர்ந்தோ
டித்துள்ளிச், சுடருநவமணிகண்மிகக்கொழித்திடுமோர்கலிபதவி
ன்றுலங்குதீரத், தடமதிற்சாயாவனத்தைத் தெரிசித்தார் முத
திநெறிதனைச்சேர்வாரே, (கரு)

இந்தவனமேழினுள்ளுஞ்சிறந்ததுசாயாவனமாமிதற்காமெல்லை
நந்துமிழ்காவிரிதென்பாற்பல்லவனீச்சரங்கிழக்கினுடுந்தென்மேற்
கந்தமில்சீர் வலம்புரமா மேற்றிசையிற் கடைமுடியே யருள்மெய்
ஞ்ஞானச், சுந்தரஞ்சேர்சுவேதவனம் வடமேற்கதாத்தோன்றித்
துலங்காநிற்கும். (கசா)

வேறு.

திருக்கடவூர்க்கீசானத்திசையிலென்றுஞ்சிறந்திருக்குமெழி
ல்பரவித்திகழுங்கீழ்பான், மருக்கமழ்பூம்பொழில் வேளூர்க்கன
லிதிக்கின்மன்னிவளர்பொன்மேருவயங்கன்மாறும், பெருத்தம
லைபுகலிக்குத்தென்மேல்பாலிற் பிறங்குமுல்லைவனத்திற்குப்பெ
ருகியோங்கி, விரிக்குமலைவாரிதிக்குக்குடபாற்முேன்றி மேவிடுஞ்
சாயாவனமாய் விளங்குமூதூர். (கள)

சீர்மலியுஞ்சிதம்பரத்திற்கெழில்சேரங்கிதிக்கினில் யோசனை
யிரண்டாய்த்திகழ்ந்துமேவும், பார்புகழுங் குடமூக்கிற் கிந்திர
திக்கிற்பகர்ந்திடும்யோசனைநான்காய்ப்பரமனூர்க், கோமலியுமீ
சான திசையின்மூன்று யெழிலாழிக்கரைக்கரை யோசனை மேல்
பாலாய்த், தேருலவும் வீதியிந்திரபுரியாயென்றுஞ் சிறந்திடுசா
யாவனமாய்த்திகழுமூதூர். (கஅ)

வேறு.

மைவளரும் கடற்றுயில்வோன் மலரவனிந்திரன் முதலாம்
வானுளோருஞ், சைவநெறிமாந்தருஞ்சீர்முனிவருந்தருமமொ

கந்தன்னின்மேவு, மக்கவரவாசினதாயிரம்பணமுடியளவுமகர்ந்ததன்றே. (உரு)

அணிமருப்பாலகழ்ந்திடும்போதனந்தனுயிரப்படத்தினமர்ந்தேயோங்கு, மணிகளினற்சாயைபுவிக்கொருகோடிகதிரொளிபோல்வருதலாலே, கணிதமுயர் மறைக்கிழவன் முதலாயவானவர்கள் கருதிப்போற்றிப், பணிபுரியுமித்தலஞ் சாயாவனமாமெனும் பெயரும் படைத்ததன்றே. (உசு)

உரைக்குமிந்தத் தலநாகபுரந்தன்மபுரந்துறக்க முயர்தென்காசி, நிரைத்தமணிகொழித்து வருபொன்னிநகர்பொன்னகரநீள்சுவர்க்க, நரைக்கும்விடையூர்தி யுறைதெய்வநாயகபுர நன்னகர்புகாரம், தரைக்குளுயர்ந்திடுமயிராவத புரியாமெனும் பெயருந்தரிக்குமாதோ. (உஎ)

மண்டியலைமோதிவரு காவேரிசங்கமத்தின்வயங்குநாவாய்
கொண்டுவருமாணிக்கமுதலானநவமணிகள்குலவிச்சேர [முந்
வெண்டருஞ்சீர்வணிகர்குலப்பட்டினத்துப் பிள்ளையாரிருந்துவா
தண்டமிழ்சேர் தண்புகார்சாய்க்காடாமெனும் பெயருநதரிக்குமன்றே. (உஅ)

அகிலதலங்களுக்கெல்லாமரசாமித்தலமயிராவதப்பேர்த் தீர்த்தஞ், சகலதீர்த்தங்களுக்கு நாயகமித்தலத்திலங்குமிந்திரமூர்த்தி, நிகமசிவாகமம்புகழுமிலிங்கமூர்த்திகட் கிறையாய்நிலவியோங்குந், தகைமைபெறுமிவற்றினுயர் வெவ்வளவென் றெவராலுஞ்சாற்றொணாதே, (உகூ)

வேறு.

இத்தலமான்மியத்தை யெழுதினோர் படித்தோர் கேட்டோர்
நித்தமுஞ்சாற்றினோர்க ணீணிலத்தறிவான்மிக்க
புத்திரரனேகர் கல்விபொருள்புவிவாழ்நாள் பெற்றே
யுத்தமஞானமெய்தி யும்பர்நாடாள்வர்மன்றோ. (௩0)

வேறு.

தீர்த்தமாமயிராவதச்செழும்புனலொருகா
லார்த்துமூழ்கியே யிரணியந்தரணி நல்லணிகள்
சேர்த்திடுங்கலைசெழியபாற்பசு சிவச்சிதமிகு
கூர்த்தவேதியர்க் களிப்பவர் கயிலைசேர்குவரால். (௩௧)

வேறு.

இப்படியென்றே சூதரியம்புதலுமுனிவரர்களிசைந்துபோற்றிச், செப்பரிய நன்னகரின் வளங்களெலாமின்னமுநீர்தெரிப்பீரென்ன, முப்புரிநூன்மார்பின் வரையருவியெனவிளங்கிட நீண்முடிதுளக்கி, மெய்ப்பொருடேர் சூதமுனி மெய்ஞ்ஞானத்தாலுணர்ந்து விளம்பலானான்.

சாயாவனசருக்க முற்றிற்று.

---

௬

## சருக்கசங்கிரகம்.

---

நிலவுலகிற் சிறந்த புண்ணியபூமியாகிய பரதகண்டத்திலே கோமுட்டிநதியின்கரையில விளங்குகின்ற நைமிசாரண்யத்திலே, சௌனகர், காசிபர், வசிட்டர், வியாசர்முதலிய மகாமுனிவர்கள் ஒருபெரிய யாகஞ்செய்து முடித்து மகிழ்ச்சிகொண்டிருக்கும்போது அங்கெழுந்தருளிய சூதமாமுனிவரை அம்முனிவர்கள் பொற்பீடத்தேற்றிப் பூசித்து வணங்கிச் சுவாமிகாள், திருவெண்காடு, திருவையாறு, கௌரிமாயூரம், திருவிடைமருதூர், திருவாஞ்சியம், சாயாவனமென்னும் ஆறுதலங்களும் காசியின்மேம்பட்டன வென்றும், அவ்வாறனுள்ளும் சாயாவனமே சிறந்ததென்றும், அடியேங்கட்கு முன்னமே அருளிச்செய்தீர் இன்னும் அச்சாயாவனத்தின் மகிமையைச் சொல்லியருளவேண்டுமென்று வேண்ட, சூதமுனிவர் மனமகிழ்ந்து சொல்வாராயினர்.

முனிவர்களே, சோழநாட்டிலே காவேரியின் வடபாகத்தில், மாதங்கவனம், தாலவனம், புன்கவனம், சுவேதவனம், மகிழவனம், முல்லைவனம், சாயாவனம் என ஏழுவனங்கள் விளங்கும். அந்த ஏழுவனங்களுள்ளும் சாயாவனமே மேம்பட்டது அத்தலம் திருக்கடவூர்க்கு வடகிழக்காயும், கடைமுடீச்சுரத்துக்குக்கிழக்காயும், சீகாழிக்குத் தென்கிழக்காயும், திருமுல்லைவாயிலுக்குத்தென்மேற்காயும், சமுத்திரத்துக்குமேற்காயும்விளங்கும். அத்தலத்தின்கண்ணே அறம்பொருளின்பம் வீடென்னும்பேற்றினை விரும்பிச் சிவபெருமானைப் பூசிக்கும் தேவர்களையும் முனிவர்களையும் சைவதபோதனர்களையும் ஆளவிட்டுச்

சொல்லவொண்ணாது. அத்தலத்தை வணங்கினோரும் துதித்தோரும் வலஞ்செய்தோரும் தரிசித்தோரும் வசித்தோரும் பூசித்தோரும் ஜென்மதுன்பம் நீங்கித் திருக்கயிலாயமலையைச் சேர்வர். அத்தலம் இந்திரபுரி சாயாவனம் தெய்வநாயகபுரம் ஐராவதபுரி முதலாகிய பற்பல திருநாமங்களைப்பெறும். அத்திருச்சாய்க்காட்டுக்கொப்பாகிய தலமும், அங்குள்ள ஐராவததீர்த்தம் சங்கமுகதீர்த்தம் முதலாகிய தீர்த்தங்களுக்குச் சமமாகிய தீர்த்தமும், இந்திரேசுரர்க்கொப்பாகிய சிவலிங்கமூர்த்தியும் எவ்வுலகத்திலும் இல்லை. அத்தலத்தின் தன்மை சிவபெருமானு ஆன்மாக்களுக்கு அருள்செய்யும்பொருட்டு எந்நாளுமங்கெழுந்தருளி யிருப்பர். அத்தலமான்மியத்தை யெழுதினோரும் படித்தோரும் கேட்டோரும் சொன்னோரும் பலன்களை யெண்ணியபடியே பெறுவர்கள் என்று சூதமாமுனிவர் சொல்லியருளினார்.

முற்றிற்று.

---

## திருநகரச்சருக்கம்.

---

விடையுகைத்தவ னிதழியைப்பணி நதிபிறையைச்
சடையில்வைத்தவ னுமையிடத்தவ னெவர்க்குந்தலைவ
னெடியபச்சை மாலயனுமேபரவிடு மமலன்
குடிகொள் பூம்புகார்ச் சிறப்பினைக்கூறுவன் கேண்மின். (க)

முன்னதாகிய கற்பத்தின் முரண்மிகு கொடியோர்
வன்னியன்ன செங்குஞ்சியர் மைவரை யென்னப்
பண்ணுமேனிய ராகியதானவர் பலர்வான்
மன்னிவெண்பிறை யெயிறுதின் றதுக்கி வாய்மடித்து. (உ)

வந்துசுற்றின ரன்னவரறிந்திடா வண்ணந்
தந்தநான்குறு தந்திமேற்சதமகன் சார்ந்தே
யந்தவானுலகத்தை விட்டகன்று வெண்காடுற்
றிந்துசேகர னிணையடி தொழுதுபின் னெழுந்தான். (ங)

மீண்டுவானவர் புடைவர வெண்குடை விளங்கத்
தூண்டுவாம்பரி வாரணத் தொகுதிகள் சூழ

நீண்டவார் குழலரம்பை யரிசையொலி நிரம்ப
வாண்டநாயகன் பூம்புகார் நகரினை யணைந்தான். (௪)

அணைந்தவாசவன் காவிரி சங்கமத்தாட
வுணர்ந்து போதையிலோத நீர்த்திரைக் குளிர்ச்சியினாற்
றணந்தபேடையைச் சேவல்கள் சிறகராற்றழுவி
மணம்பொலிந்த கேதகையிற் கண்வளருதல் கண்டான் (௫)

வேறு.

மணிலவொண் கனகதாரப்பொற் பைந்தொடி நுளைச்சியர்தம்
மணிபணிவிரல்கடைய மகிழ்நர்நல்வரவிற் காழி
பணிமொழி மறைந்துமாழி நீரத்திலமர்ந்து நிற்கு
மிணையிலா நறைசேர்புன்னை யிரும்பொழிலினை யெதிர்ந்தான். ( )

வளைசங்கள் பொலிதலானும் வண்டுகிர் திரளத்தாலும்
புனைதிரை பொலிதலானும் சங்கங்கள் பொருந்தலானும்
நலசுழி சுழித்தலானும் பொருவரா லலவனாலுங்
கனைகடல் கன்னிமாரைக் கடுத்திடுங் காட்சிகண்டான். (௭)

வேறு.

கன்னிமாரின் மருதுறை கூத்தாடலுங் கவினும்
புன்னைச்சூழலி லன்னமுங் கானலம்புனலின்
பன்னுபானலுங் கழிகளுங் கண்டனு மணல்சேர்
வன்னகுன்றமும் வலாரிநேர் கண்டுள மகிழ்ந்தான். (௮)

வேறு,

பவளமுங் கதிர் மிக்கோங்கும் பருமணிக் குவையுநீடு
துவளுநுண்ணிடை யார் மூரலென்னுமித் திலமுஞ் சூழ்ந்த
குவளைமாமலர் சேர்புன்னைத் தண்டலைக் கானலின்வாய்க்
கவளமால்யானை போலக் கடற்றிரை யெறிதல்கண்டான். (௯)

திண்டிறற்றனதனென்னச் செல்வமும்படைத்தேயாக்கை
கொண்டபொன்னணி யணிந்தகொடையிலாவுலோபர்மிக்க
தண்டமிழ்க் கவிஞர் தம்பாற்சார்ந்திடி னொடிக்குமுன்னே
கண்டவர்க்கொளித்தல்போலக் கடகங்களொளித்தல்கண்டான்.

வேறு.

கிரிபோற்பணைத்துப் புடைத்து விம்மிக்கிளர்பூண்முலையாரா
சையுறத், தரியாதனங்கன் சரந்தொடுக்கத் தயங்காடவர்கள்வ

வரைப்புயமே, லரிதாம்வினைசெய்கம்மியன்றனுலையிற்பொறியாம
ழலென்ன, விரிவாங்கடனற்றிரைத்துளியைவிரைந்து வீசலதுக
ண்டான். (கக)

வேறு.

இனையபல்வளம் பார்த்தன னிந்திரனியல்பாய்க்
கனைகருங்கடற் காவிரிசங்கமமூழ்கிப்
புனைபசுக்கணங்லாடை வாகனங்கள்பொன்போத
னனையநான்மறையந்தணர்க் கன்புடனளித்தான். (கஉ)

தானம்பற்பலசெய்தபின் றழைசெவித்தவள
வானையேறிமே மீண்டனன் றண்டலையதன்வாய்த்
தேனுலாவிய மலர்களைத் தருக்கள் சிந்திடுதல்
வானவேந்தற்கு மலர்மழைபொழிவதைமானும். (கங)

வேறு.

மாதளைவருக்கையொடு மன்னிவளர்கோங்கு
சூதமொடுதண்கமுகு சொற்றிடுநரந்தந்
தாதுலவுபொன்மலர் தழைந்திடுகடுக்கை
சீதவிளநீர்பெருகு தெங்குசெறிகாவில். (கச)

சட்டமொடுமஞ்ஞையெழில்சார்சிறைவிரித்தே
வட்டமிடுநன்னடனமாட மலர்வண்டார்
இட்டமுடனின்னிசைபெடுக்கவிளமாதர்
கட்டழகர்கண்டு களிகொண்டுலவுவாரால். (கரு)

தெங்கினிலிவர்ந்தினிய செங்கனிகள்சிந்திப்
பைங்கமுகிலார் குலைகள்பாங்குறவுதிர்த்தே
யங்குளவரம்பையினருங்குலைகள்செற்று
மங்கலகன்மந்திசிறுவரையில் வரும்வாவி. (கசு)

மாதர்சினையுச்சிமிசைவைத்திடுமிறாலின்
சீதநறவத்துளிவிழிப்புனன்மன் சிந்தி
ஓதுமொலிவண்டினிசைத்தோத்திரமுரைத்துப்
போதைமிகவேந்தியடியார்புரைவபூங்கா. (கஎ)

சந்தனமரச்செறிவு தன்னிலிளமாதர்
கந்துகமெடுத்தெறிவர் காமுகரைவெல்வர்

வந்துசிலபாதர் மணமல்குமலர்கொய்வர்
உந்துமடவார் சிலருகைத்திடுவரூசல். (கஅ)

வேறு.

இந்தக்காவினின்வளமெலாமிந்திரன் பார்த்துச்
சிந்தையின்மகிழ்வெய்தி யேதிரையெனுங்கரத்தாற்
கந்தமாமலர்சொரிதிருக் காவிரிக்கரையின்
வந்துசேர்ந்தனன்வடிவெலாங்கண்பெறும்வானோன். (கசு)

பொங்கியோங்கு பொன்முகலிகோதாவிரிபுகலுந்
துங்கபத்திரை நருமதைபம்பை யேதுலங்கு
மங்கலம்பொலிசோணை முத்தாநதி வரங்கூர்
கங்கைமாநதி தொழுதிடும்பொன்னியைக்கண்டான். (உ0)

தவளவால்வளையுயிர்த்திடு தரளமும்பொன்னுங்
கவளயானையின் மருப்புநன்மணிகளுங்கமழுஞ்
சவரியும்விரைசசநதமுங் கொடுவருதலினு
லிவணல்வைசிய ரொத்திடுமித்திருநதியே. (உக)

நறையளாவிய நறுமலர்தூவிகணிறைத்துக்
குறைவிலாத செம்பொன்னொடு மணிகொழித்திடலான்
மறைசொலும்பர் தம்விமானமாய்வய்ங்கியவுடுக்க
ணிறையும்வானத்தின் வில்லினைநிகர்க்குமிந்நீத்தம். (உஉ)

வண்டுமீக்களு மொய்த்திடவாம்பிகந்தாக்கங்
கொண்டுமுட்டெளிவின்றியேகுதித்துத்தேக்கெறிந்து
மண்டியேமிகவருதலான் மதுவினைநுகரு
மிண்டுமாக்களைநிகர்த்தது விரிந்தநீர்வெள்ளம். (உ௩)

படைத்தபல்வளஞ்சிறந்திடும்பொன்னியைப்பார்த்தே
மடற்செறிநதிடு மலர்நிறைபழனத்தின்வந்தான்
வடித்தமாமறைவேதியர் வந்தெதிர்வாழ்த்தி
யெடுத்துச்செங்கரம்விரித்தல்போற்கமலங்களிலங்கும் (உச

வேறு.

மகபதிவந்தானென்று வரிவிழியரம்பைமாதர்
செக்கிணவெனநடிக்குந்திறமைபோல்வனசமீதி
னிகரிலாவன்னப்பேடு நீள்இறைகளையுயர்த்தித்
தகைமைசேர்வாவிதோறுந் தாழ்விளையாடுமாதோ. (உரு)

அமரர்கோன் வரவைநோக்கியாட்பாணர்நறவமாந்தித்
தமருடன்கூடிப்பாடுந் தன்மைபோற்றடங்களெங்குங்
கமழ்மலர்மீதிலேறிக் களிவண்டர் கள்ளருந்தித்
தமதினத்தோடுங்கூடித் தழைந்தபண்பாடுமன்றே (௨௬)

வேறு.

கற்புடையகுலமாதர் கணவர்முகநாடுங்காற்
பொற்புறவேகுனிவதுபோற்புனிதமுறவிளைசெந்நெல் [லி
பற்பலவாய்த் தழைத்தோங்கிப் பணைத்துநிதியெனநெருங்
நறபுனலினெழில்பாத்து நாணிபிகசிறந்திடுமால. (௨௭)

மாடமலிகள்சூழ் இயவென்னவயங்கிடுசெங்கெநற்போரின்
மீமிசையிற் றவழ்ந்தேறி வெண்பணிலம்வி...
லேமமிகுமொளிபரப்பு மிருந்திடமாமே...
மாமதியமிவர்ந்திருக்குந் தன்மையெனவயங்கிடுமால். (௨௮)

வேறு.

பசுங்காய்க்கமுகுங்கன்னலுமேபரந்துநீண்டுதலைதெரியா
திசைந்தாழைனச்செழுஞ் சோலையிடத்தின் மதுரமிக்கோங்கி
யசும்புபாயுந்தேனினிருலார்ந்து விளங்கலம்புயலசோ [ல.
விசும்பிலுறைந்துகதிர்பரப்பும்வெண்மாமதிபோற்றோன்றிடுமா

வேறு.

மலர்நெருங்கிய கழனியின்வளங்கண்டுமகிழ்ந்து
தலைமைபெற்றிடு செம்பியர்மணிமுடிதரிக்கு
மலகிலாவிதிநிறைந்திடுபூம்புகாரதனிற்
கலைமுழங்கிடு மந்தணர்வீதியைக்கண்டான். (௩௦)

வேதவோசையுமாகமவோசையும்விளங்கும்
பாதிவெண்பிறைவேணியர்சரிதமும்பகருங்
கீதவோசையுமாறங்கவோசையுங்கெழுமி
நீதியந்தணர்தெருவெலாங் கடலொலிகிகர்க்கும். (௩௧)

மகுடமாமுடிபுனைந்திடுமன்னர்வீதியினிற்
பகடுபந்திசெய்திருத்தனம் பறைசிதைத்தாற்கண்
டிகலொழிந்தினியேனுமிங்கிருப்பமென்றெணிமுன்
னகமெலாந்திரண்டுறுவதையொக்குமந்நகரில். (௩௨)

வரிசைபெற்றிடுபுரந்தரன்வந்தனனென்றே
புரிசைமேற்றிகழ்மணிக்கொடிவிண்ணினிற்பொருந்துங்
குரிசினீனெடுமாடவீதிகளினிற்குறுகென்
றிருகைநீட்டியேவாவெனவழைத்தல்போலிலங்கும். (௩௩)

மாடமாளிகைவான்முகடணவுதோரணங்கள்
பீடுபெற்றிடுபுரிசைகணிலாமுற்றம்பிறங்கு
மாடவீத்தியறாவொடுத்திரங்களுமமைந்தே
நீடுநற்றெருவாயிலின்முகப்புகணிலவும். (௩௪)

வேறு.

தோரணமரதனச்செந்தூணினிற்றொடுப்பரம்பொற்
பூரணகும்பம்வைப்பர்பொற்றுகில்புனைவரென்றுங்
காரணிநெடியமாடங்கவின்பெறவலங்கரிப்ப
ராரணமுணர்ந்தவெய்யர்க்கிருநிதியளித்துவப்பார். (௩௫)

வேறு.

அன்னமென்னடைக்கன்னியர்பலர்கள்பந்தடிப்பார்
வன்னவாழைகள்கமுகுகள்பந்தரின்வனைவார்
ஞான்றுமுத்தமும்பவளமுந்தூங்குசெம்மணியு
மின்னுபொன்னுடன்வயிரமுமெய்யினிலணிவார். (௩௬)

வேறு.

சந்தனச்சாந்துநல்லதழையகில்கமழுஞ்சாந்துங்
கந்தமார்மலருங்கொண்டுகவின்பெறுமறுகுதன்னில்
வந்துவந்துவகைகூர்ந்துமன்னவர்குமரரெல்லாஞ்
சிந்தியேயொன்றுக்கொன்றுசிறப்புடனுடிநிற்பார். (௩௭)

வேறு.

அரசர்வீதியின்சிறப்பெலாம்பார்த்தனனப்பா
லுரைசெய்வித்தகவணிகர்தம்மறுகுகண்ணுற்றான்
நிரைநிரைத்தகோமேதகச்சுவர்த்தலநிரம்ப
வரைவிலாதொளிர்வச்சிரத்துயிலமும்வகுத்து. (௩௮)

புருடராகமாமரதனத்தாற்கைகள்பொருத்தி
வரிசையாவயிடூரியவரிச்சினைவரிந்து
பெருகுசெம்பொனாற்றகடுகளவற்றின்மேற்பிணித்துக்
கிரிகள்போலவேமாளிகையின்னணங்கிளரும். (௩௯)

இனையமாளிகைகோடிகோடிகளுமேயிலங்க
மனையிற்செந்திருமங்கலம்பொலிந்துகூத்தாடப்
புனையுஞ்செம்பொனுந்தரளமுமணிகளும்பொலியத்
தனதன்றன்னினும்பெருகுசெல்வத்துடன்றழைப்பார

சிறப்பதாகவேவாணிபத்தொழில்பலசெய்வார்
அறத்தைவேண்டியேயிருந்திவந்தவர்க்களிப்பார்
திறத்தருந்தமிழிலக்கணவிலக்கியந்தெளிவார்
நிறுத்துவார்புகழ்கவிஞர்பாமாலைதோணிறைப்பார- (௪௧)

வணிகர்தங்குலமரபெலாந்தழைத்திடவந்தே
யணிகொடண்புகார்நகரினுக்கதிபராயுறையு
மிணையில்பட்டினத்தடிகளினிருநிதிப்பெருக்கம்
பணியின்மன்னனுமளவிட்டுப்பகருதலரிதால். (௪௨)

பயக்குநல்வினைதீவினைபரனருளல்லாற
செயற்குநம்வயமில்லையென்றுளமிகத்தெளிந்தே
கயற்கணங்கையைக்கடவுளுக்களித்தவக்கறையி
லியற்பகைவருமிம்மறுகியலெவருறைப்பார். (௪௩)

மன்னர்தம்படைவாளினிலதிகமாய்வயங்கிப்
பன்னுமாமரகதத்திறற்செய்படைவாளு
மின்னும்வச்சிரமேழியும்பவளவேற்காலு
மன்னுமாமணிக்கலப்பைகணிரைநிரைவகுப்பார். (௪௪)

பதுமராகத்தான்மணிநுகம்பைம்பொனுறைபாசம்
எதிர்கொணல்வயிடூரியத்தியற்றுதார்க்கமபு
குதிகொள்கன்றொடாக்குழவிடபக்குழுக்குலவி
வதியுநற்றொழுவத்திடைமன்னிடவைப்பார் (௪௫)

நங்கைபாகனல்லடியராயாவர்நண்ணிடினுங்
சங்கைகூடியேயாமெனக்கருதியன்னவர்தம்
புங்கமுறுமலர்ப்பதம்பணிந்தருச்சனைபுரிந்து
துங்கநல்லுணவருத்தியேமகிழ்வரித்தூயோர். (௪௬)

அன்னதானத்தீக்கரும்பசியாளனேயாயி
னன்னர்ப்பாத்திரமெனவறிந்தலதுநாடாமே
நன்னனேர்சொலோடனமளித்துயிரெலாங்காத்து
மன்னுகீர்த்தியேதரிப்பரிவ்வரநகிமரபார். (௪௭)

வேதமோதியரங்கொழுகுநல்வேதியர்மொழியைச்
சீதமோங்குநன்மலரெனச்சென்னியிற்சேர்ப்பார்
மாதவன்றொழுமாதொருபாகனூர்மாண்பார்
பாதவந்தனைநாளுமேபணிப்பவம்பறிப்பார். (௪௮)

உலகமுய்யவேயுழுங்குலத்தொழில்புரிவோர்கள்
நிலைபெறும்புகழ்படைத்தவேளாளர்நீதியினோர்
தலைமைபெற்றிடுமரநதிகுலத்தவர்தக்கோர
மலியுமவ்வீதியின்மேழியங்கொடிகண்டுமகிழ்ந்தான். (௪௯)

வேறு.

என்றுமளவுநிறையுமாகியதேரிலக்கந்தங்
கண்ணிடவேபட்டுபெயர்பொறித்திட்டகருமபொதிகள்
நன்றுகடைவாயிலைபுறகருந்தாட்காவலையும்
இன்னமுறுமுடையோர்நகாவலையுந்தீர்ந்தனவாய். (௫௰)

ஆடுந்துவமபமாககளைகட்போருளராயினவர்கழுத்துக்
கடுந்திடோதலையேற்றிக்கடிநகர்சூழ்விபயினலார
கொடுத்துமியாதவாக்குக்கொள்வோமென்றுள்ளுநோ
நடுநருவிந்துதுயாசெய்யுநலமார்வெள்ளிடைமனறும்.

அழுங்குமெய்யாளருடனருகன்செவிடுமம
முழுகிமேய்போழ்ததேமுதிர்ந்திடுமார்வத்துடனே
பழுதிலதோகாடசிறம்பாங்குறவேபெறுதவிறை
தொழுதுவலஞ்செயாக்கழியுநதொல்லிலஞ்சிமாமன்றும்.

வஞ்சமுண்டுமபற்பகையுற்றோராவின்வாய்ப்பட்டோர
நஞ்சமுண்டுமிகவருநதிநடுங்கிடுவோர்களியினு
லஞ்சிடவேயிடிபட்டோர்சூழ்ந்துதொழவத்துயர்போம்
விஞ்சுமொளிகாணெடுக்கன்மேவிநின்றமன்றமுமே. (௫௩)

தவவேடந்தனின்மறைந்தத்தவத்திற்கிழுக்கான
பழுமைசெய்வோர்யலார்பாவையரைநயநதிடுவோ
ராவமறைந்துநின்றொழுகுமலைவைப்பெண்டிரொடுகை
கவழுறுசான்றினர்புறங்கூற்றுளாரறைபோகமைச்சர். (௫௪)

இன்னவரென்கைக்கொண்டுவிப்பாசத்தகப்படுவோ
ரென்னாங்கர்நாற்காதவெல்லையளவுங்கேட்க

இன்னறருங்கடுங்குரலையெடுப்பிப்பினங்ஙன ஞெசெய்
யன்னவனைப்பூதமடித்தயில்பூதசதுக்கமுமே. (நிநி)

கோவினதுகோல்சற்றுக்கோடிடினுமறங்கூறுந்
தாவிலவைநூல்கோடியொருதிறத்திற்சாய்ந்திடினு
நாவினெடுநெவிலாதுநவையுறுகண்ணீருகுத்துப
பாவையதுநின்றழூஉம்பாவையமன்றம்பார்த்தனுல். (நிசு)

வேறு.

தளவமூரல்சேர்பற்பலகணிகையர்தண்ணார்
களபகுங்குமக்குழம்பினைக்காலேயர்காற்றேற்
றுளநெகிழ்ந்திடவும்பற்கோடொக்குமொண்முலைமேல்
வளமுறப்புனைந்துலவுமம்மறுகுகண்டனனுல். (நிஎ)

இணையில்பூம்புகாரெனும்பதிவளமெலாங்கண்டே
யணிகொள்வானவேந்தகமகிழ்ந்தாவயினுவித
துணையதாயதன்னுன்மலிங்கப்பரஞ்சோதி
மணமிகுந்தமாமலரடியருச்சிக்கமதித்தான். (நிஅ)

வானநாட்டினுஞ்சிறந்ததாமித்தலம்வளங்கூர்
ஞானயோகியரமரர்கள்சித்தர்கணனுருக்
தானமாமிதுபுத்தியுமுத்தியுந்தருமே
லானதென்றரன்பீடிகையவண்வைக்கநினைந்தான். (நிகூ)

வேறு.

எனச்சூதர்புகார்நகரினியல்பெல்லாமெடுத்துரைக்க
மனத்தானுநினைப்பரியதவமுனிவர்மகிழ்கூர்ந்து
தனத்தாசைமுதன்மூன்றுந்தடிந்தருளுந்தாபதனே
வனப்பாரிநதிரன்பூசைவைத்தகதையுரையென்றார். (கூ0)

முற்றிற்று.

---

## சருக்க சங்கிரகம்.

---

ஆதிகற்பத்திற்கொடியவர்களாகிய அளவற்ற அசுரர்கள், இந்திரனோடு போர்புரிந்து வெற்றிகொள்ள நினைந்து, தேவலோகத்தை யடைந்து, பொன்னகரத்தைச் சூழ்ந்துகொண்டார்கள்.

இந்திரன் அஃதறிந்து பயந்து அசுரர்களறியாவண்ணம் வெள்ளையானையின்மீதேறிக்கொண்டு பூலோகத்தில்வந்து, திருவெண்காட்டையடைந்து சுவேதாரண்யேசுவரரைத் தெரிசித்து அங்குநின்றும் புறப்பட்டுக் காவிரிப்பூம்பட்டினத்திற்சென்று, காவிரிசங்கமத்திலே ஸ்நானஞ்செய்து, பிராமணர்களுக்குப்பற்பல தானங்கள்கொடுத்துப் பின்பு காவிரிப்பூம்பட்டினத்தின் சோலைவளங்களையும், காவிரியாற்றின் பெருக்கத்தையும், வயல்வளங்களையும், அந்தணர்வீதியையும், அரசர்வீதியையும், வைசியர்வீதியையும், வேளாளர்வீதியையும், "எண்ணும் அளவும் நிறையுமாகிய இலக்கத்தையும் பெயரையும் தம்மேலெழுதப்பட்ட பொதிகள் வாயிற் காவலையும் நாட்காவலையும் உடைமையோகாவலையும் நீங்கினவர்ப்பக்கிடப்ப, அப்பொதிகளை திருடுவோருண்டாயின் கழுத்துக் கடுக்கும்படி அவர் தலைமீதேற்றி நகர்முழுதையுஞ் சுற்றிவரச் செய்தலேயன்றி அவர்க்குக்கொடாததும் திருடுவோமென்று நினைப்போரையும் பெருந்துயர் செய்யவதுமாகிய" வெள்ளிடைமன்றத்தையும், "புண்ணுலழுகியமெய்யினரும் கூனரும் செவிடரும் ஊமரும் ஸ்நானஞ்செய்த அப்பொழுதே அவர்களுக்குப் பழுதற்ற காக்ஷியையும் நிறத்தையும் கொடுத்தலினால் அவர்கள் தொழுது பிரதக்ஷணம் செய்து செல்கின்ற" இலஞ்சிமன்றத்தையும், "பித்துப்பிடித்தோரும் பாம்பாற்கடிக்கப்பட்டோரும் நஞ்சுண்டு வருந்துவோரும், பேயாற்பிடிக்கப்பட்டோரும் வலம்புரிந்துவணங்க அவர்க்கு அத்துன்பத்தைப்போக்கும்" நெடுங்கல்மன்றத்யையும், "தவவேடத்தின் மறைந்து பாவஞ்செய்வோரும் பிறர்மனைவியைவிரும்புவோரும் அலவைப்பெண்டிரும் பொய்ச்சாக்ஷிசொல்வோரும் புறங்கூறுவோரும் தருமநெறிதவறிய மந்திரிமாரும் ஆகியஇன்னோர்கள் என் கைப்பாசத்திலகப்படுவாரென்று நகரத்தின் நாற்காத எல்லையளவும் கேட்கும்படி கடுங்குரலாற்கூறிப்பின் அவ்வாறுசெய்வோரை யடித்துண்கின்ற பூதசதுக்கத்தையும், அரசன் செங்கோல் சிறிதுகோணினும் தருமசபையார்பக்ஷபாதஞ்செய்யினும் வாயினாற் சொல்லாது கண்ணீர்சொரிந்து பாவையானது நின்றழுகின்ற" பாவைமன்றத்தையும், கணிகையர் வீதியையும், மற்றுமுள்ள சிறப்புக்களையுங்கண்டு மகிழ்ந்து, இப்

பூம்புகார் நகரம் தேவநாட்டினுஞ் சிறந்ததாயும், ஞானிகளும் யோகிகளும் தேவர்களும் சித்தர்களும் வசிப்பதாயும், போக மோக்ஷங்களைத் தருவதாயும் விளங்குதலால் இதனிடத்தே நம்முடைய ஆன்மார்த்த லிங்கமூர்த்தியை எழுந்தருளச்செய்து பூசித்துக்கொண்டு வசிப்போமென்று நினைந்தான்.

---

## இந்திரன் பீடிகைவைத்த சருக்கம்.

---

முனிவர்மொழிந்திடவினவியசூதமுனிக்கோமான
இனிதெனவானவர்கோனிறைபீடிகையெழில்சேரும்
தனமிகமல்குபுகாரினில்வைத்திடுதகைசொல்வேன்
புனிதமொடன்பொடுகேளுமியென்றேபுகல்கின்றான். (௧)

பல்லவனீச்சுரநன்னகரின்மேல்பாலாக
நல்லதொர்காவிரிநதிவடபாலொர்குரோசத்தி
னெல்லையிலரிமயனாலொர்விமானமெழிற்பொன்னால்
வல்லையமைத்ததிலரனுறைபீடிகைவைத்தானால் (௨)

வைத்தலும்வானவர்மலாமழைபெய்தனர்வானோநறு
முத்தமதுந்துமிமிகவுமுழங்கினவுரவோர்கள
சித்தர்கண்மொய்த்தரகரவொலிசெய்தனர்சிவனோதும்
வித்தகவாகமவேதமுழங்கினமேன்மேலும் (௩)

கின்னரர்பாடினர்துமபுருநாரதர்கிளர்யாழ்கொண்
டின்னிசைசெய்தனரெண்வசுவுடனேயெழுமாதா
பன்னியநாகர்கள்சிவகணநாதர்பரன்மேவு
மன்னியபீடிகைகண்டுபணிந்துமகிழ்ந்தார்கள. (௪)

சநதிரர்சூரியரங்கியியக்கர்கடாமுற்றார்
மந்திரியுடனேவாயுவும்வருணனும்வந்தார்கள்
கநதமுறம்புயமாதொடுபாரதிகலையேறுஞ்
சுந்தரியோடுபுலோமசைபூமகள்சூழ்ந்தாரால். (௫)

திருமால்பிரமனொடைங்கரன்வடுகன்செவ்வேளுந
குருமாமணிசேர்பீடிகைதொழுதெங்கோமானே
யருமாதவமேமுனிவோரரசேயடியாருக்
கொருமாநிதியேயெனநற்றுதிகளிசைத்திட்டார். (௬)

சங்கரன்மேவியசெம்பொற்பீடிகைதனையேன்விப
புங்கவனும் வலம்வந்துவிழுந்தேபுவிமீதெட்
டங்கமுறத்தொழுதெம்பெருமானேயமரேசா
விங்கடியேன்செய்பூசனைகொண்டருளென்றேத்தி. (௭)

வேறு.

என்னையாளுடையிறைவனிங்கமர்தலாலிமையோர்
மன்னுமாமறைமுனிவரரித்தலம்வரலால்
வன்னமாமணிபொன்னிறைமாடமாளிகையாற்
பொன்னிறுடிதுவேயெனப்புரந்தரன்புகழ்ந்தான். (அ)

என்றுமாதவச்சூதனுமிசைத்தலுமுனிவோர்
நன்றெனுமகிழ்நதிந்திரன்பூசையைநவில்வாய்
மன்றிலாடியமலரடிக்கன்பனேயென்ன
வன்றுசூதமாமுனிவனுமதனைநன்கறைவான். (௯)

முற்றிற்று.

---

## சருக்க சங்கிரகம்.

---

இந்திரனைவன் திருப்பல்லவனீச்சுரத்தின் மேல்பாலாக காவேரியின் வடபாலில் ஒருகுரோசஎல்லையில் தேவதச்சனைக் கொண்டு ஒரு பொன்விமானஞ்செய்வித்து, "தேவர்கள் பூமாரிபெய்ய, பஞ்சதுந்துமிமுழங்க, வேதாகமங்கள் ஒலிப்ப, சிகாமுதலியோர்கள் ஹரஹரவென்றேத்த அவ்விமானத்தினிடத்தில் ஆன்மார்த்தலிங்கமூர்த்தியை" எழுந்தருளச்செய்து, வலம்புரிந்து நமஸ்கரித்துத துதித்தான்.

---

## இந்திரன் பூசைச் சருக்கம்.

---

தெண்டிரைபொன்வீசிவருபொன்னிநதிசேர்ந்தே
மண்டுபுனிதப்புனலின்வானிறைவனுடி
யண்டர்புகழ்நீற்றினையணிந்துதிருநீல
கண்டனதுகண்மணிகளின்பெறவணிந்து. (க)

சொன்னகலசத்திலுறு தூயபுனல்கொண்டே
மன்னுமெழில்வெண்கரிமணிப்பிடரினேற்றி
மின்னுமடமங்கையர்கள்வெண்கவரிவீசத்
தன்னிகரிறுந்துமிதடாரிகண்முழங்க. (உ)

வந்தொளிகொள்செம்பொன்மணிமந்திரமடைந்து
சிந்தையினிலன்பொடுசிவன்பதமிறைஞ்சி
நந்திடுதெய்வப்பசுவினன்னெய்கொடுகோடி
யுந்துகதிர்வீசிரவியொத்தசுடரிட்டு. (௩)

வேறு.

அங்கணன்முன்னுரைத்தருளுமாகமத்தின்படி யவன்றனது ண்மேனிக்குத், துங்கமுறுபரிமளஞ்சேர்தயிலமுமானைந்து மமுதைந்துந்தூய்மை, தங்குமதுரந்தருபாறயிர்நெய்தேன் செழுங் கரும்பின்சாறுதீய, செங்கனிநீர் தெங்கிளநீர் சந்தனநீ ரும்பனீர் சிறக்கவாட்டி. (௪)

வேறு.

மெய்யினுறுமப்புனலைவெண்டுகிலின்மாற்றிச்
செய்யவொளிர்பட்டுவகைசீரொடுதரித்துத்
துய்யகளபப்புழுகுபூசிவிரைதோன்று
மொய்யலர்கொள்கற்பகநன்மாலைமுடிசூட்டி. (௫)

செங்குவளைநெய்தனறைசேர்ந்திடுசெவந்தி
கொங்குகமழ்தாதகிகுளிர்ந்தவிரைமௌவல்
பொங்கொளிநிறைந்திடுகடுக்கைபுனைவில்வம்
பங்கயமுதற்பிணையல்பற்பலவணிந்து. (௬)

மாமணியினுபரணவகைகள்பலசாத்தித்
தூமதிநிறத்ததிருநீற்றினொடுசோதிக்
கோமணிசிரத்தொடுகளங்குளிருமார்பம்
மாமலையெனும்புயமருங்கினுமணிந்து. (௭)

வேறு.

காவிரிதீரத்திடைவிளைகழனிச்செஞ்சாலி
மேவியவாலரிபாசொளிமுற்கம்விரையேறும்
ஆவுறுநெய்பாகிவைகொடுநல்லன்பாற்செய்த
தூர்வில்குளோதனமிவைதிருமுன்னர்ச்சார்வித்தே. (௮)

ஏலஞ்சுக்கொடுசர்க்கரைநல்லரியின்பாலுஞ்
சாலும்பாயசமாதியபலவுந்தந்தேபின்
கோலம்புனையுமிதம்பெறுமுக்கனிகுளிர்தேனுஞ்
சீலமுடன்றிருமுன்புநிவேதனஞ்செய்தானால். (௯)

வேறு.

சிறந்தவெள்ளிலைசெம்பழுக்காயுட
னிறைந்தவன்பினிவேதனஞ்செய்துபின்
பிறங்குவாசப்பெரும்புகைகாட்டிநற்
றிறந்தருங்கதிர்த்தீபங்கள்கோட்டியே. (௰)

செழுங்கணாடிமுன்காட்டித்திருமுடிக்
கெழுந்தமாமதியென்னக்குடைகவித்
தொழுங்கின்காலசமுற்றிடுமெல்வளி
வழங்குசாமரம்வீசினன்மன்னவன். (கக)

இன்னயாவையுமன்பொடியற்றியே
துன்னுநல்விரைத்தூயகரந்தையும்
புன்னைகூவிளமும்புதுநெய்தலும்
பன்னுநறுசமும்பண்பொடுசாத்தியே. (கஉ)

தூயகவ்வானிற்றுலங்கிடுகற்பகப்
பொங்கர்நாண்மலர்மந்திரபுட்பமாய்க்
கங்கைசூடுங்கடவுட்கருச்சித்துச்
செங்கையாரப்புட்பாஞ்சலிசெய்தனன். (கங)

வேதநான்கினுமிக்கதிதுவென
வோதுருத்திரமந்திரமோதியே
யாதிதேவனையன்பொடுபோற்றியே
கோதிலாதபொற்கோயிலைச்சூழ்ந்தரோ. (கச)

மன்னிடும்புவிவீழ்ந்துவணங்கியே
பொன்னிறுட்டுப்புத்தேளிர்புரவல
னென்னமேனாமறிவருமன்னனைத்
துன்னுதோத்திரஞ்செய்யத்தொடங்கினான். (கரு)

வேறு

தென்குடந்தைதனி லுறையுமெஞ்ஞானப் பரஞ்சுடரே சித்தாபோற்றி, அன்பமெலாங்களைந் தருளுமிடைமருதூர் வீற்றிருக்குஞ்சோதிபோற்றி, நன்குவளர் திருச்சேய்ஞலூரிலமர்ந்தருளுமெங்கணாதாபோற்றி, பொன்பொலியுங் கடுக்கையணி வேணியபூம்புகாரமர்ந்தபுனிதாபோற்றி. (௧௬)

ஆவடுதண்டுறையரசே குற்றாலநகர்மேவுமமலாபோற்றி, காவிரிபொன்றிரைக்கரத்தாற்சொரியுமயிலாடு துறைக்கருத்தாபோற்றி சேவமருங்கொடியானே யாதங்கவனத்திருக்குஞ் செல்வா போற்றி, பூவிரியும்பொழிற்புகார்த் திருநகர்வந்தமர்ந்தோனே போற்றிபோற்றி. (௧௭)

திருக்கடவூர் நள்ளாறுதென்குரூர்மேவியருள் சிவனேபோற்றி, மருக்கமழ்ப் பூம்பொழிற்புகலூர் செங்காட்டங்குடி மருகல் வளர்தென்காசி, கருப்பறியலூராலங்காட்டிலுறைந்தருணீலகண்டாபோற்றி, தருப்பொலி பொன்னாடாண்டுதண்புகார் வந்தமர்ந்ததனியேபோற்றி. (௧௮)

கனகசபைதனிலாடியடியர்வினைகளைந்தருளுங்கடவுள்போற்றி, யனமிவர்தி பூசனைசெய் தோணிபுரத் தமர்ந்தருளு மழகாபோற்றி, தனைநிகருங் கயிலைமலையாரணியிலுறை செஞ்சடிலாபோற்றி, புனையுமலர்க் கற்பகநாடாண்டு புகார்வந்தமர்ந்தோய் போற்றிபோற்றி. (௧௯)

அருணகிரியுறைவோனே விருத்தகிரி யமர்வோனே யையா போற்றி, கருணைபொழிகாளத்தி தீர்த்தகிரி யவிநாசி கழுக்குன்றத்தோ, டருவினைக ளகற்றியருள் புள்ளிருக்குவேளூர்வாழமலாபோற்றி, திருவளர் வெண்காடமர்ந்தோய் செழும்புகாருறை தேவதேவபோற்றி. (௨0)

அண்டமுகடணவிவளர் திரிச்சிராப்பள்ளியுறையரசேபோற்றி, தண்டபதிச்சடையானே திருவானைக் காவிலுறைசோதி போற்றி, சண்டகராமவுணர்தமைக்காயுமாறருள் புரிவைகாலகாலா, புண்டருசூலப்படையாய் புராந்தகனே புகாரமர்ந்த புனிதா போற்றி. (௨௧)

பந்தபாசந்தவிர்க்குமுனிவரர்பணிந்துபோற்றி.
வந்தருச்சித்தலிங்கஞ்சதமெனவறைவர்மாதோ, (உகூ)

பொன்னிசேர்சங்கமுகத்திற்புகுந்தாடிச்சாய்க்காட்டீசர்
மின்னுதாள்பணிந்துவெண்காடுற்றுமுக்குளம்படிந்து
மன்னுவெண்காடர்ப்போற்றிவந்துகாவிரியின்மூழ்கிப்
பன்னுசாய்க்காடர்பாதம்பரவுவார்படைப்பார்முத்தி. (௩௦)

வேறு.

எனவுமிந்திரன்சபரியையிபற்றியதிசைத்தாய்
புனையுமாமணிபபீடிகைபெயர்க்குமாபுகலென்
றனையமாமுனிவரரொளாமடிதொழுதேத்த
வனையுஞ்செஞ்சடைச்சூதனுமனமகிழ்ந்திசைப்பான். (௩க)

முற்றிற்று,

## சருக்க சங்கிரகம்.

இந்திரனனவன் காவிரிநதியிலே ஸ்நானஞ்செய்து, திருநீறணிந்து, உருத்திராக்கமாலிகை பூண்டு, பொற்கலசத்திலே திருமஞ்சனமெடுத்து, வெள்ளையானையின் பிடரியினேறி தேவமாதர்கள் சாமரம் வீசப பஞ்சதுந்துமி முழங்கத் திருக்கோயிலிற்சென்று, சிவபெருமானை வணங்கி, தெய்வப்பசுவினெய்யாலெண்ணில்லாத தீபமேற்றி, சிவாகமத்திற்சொல்லிய விதிப்படி சிவபெருமான்றிருமேனியில் பரிமளதைலமுதல் கும்பத்துப்புண்ணியநீருயுள்ள திருமஞ்சனஞ்செய்து, திருவொற்றுடை சாத்திய பீதாம்பரம் ரெத்நாபரணம் திருநீறு களபப்பூச்சு கற்பகமாலை முதலியவைகளைச்சாத்தி, செங்கழுநீர் செவ்வந்தி வில்வம் கரந்தை கொன்றை முதலிய புட்பங்களாலர்ச்சித்து, பரிமளதூபங்காட்டி, சர்க்கரைப்பொங்கல் பாயசம் முக்கனி முதலியவெல்லாம்நிவேதித்துப் பூசித்துப் புட்பாஞ்சலிசெய்து உருத்திர மந்திரமோதி யன்போடு துதித்து, வலஞ்செய்து நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய்தான்.

இவ்வாறு இந்திரன் நாடோறும் பூசித்துக் கொண்டு வருநாளில் ஒருநாள் சிவபெருமான் இடபவாகனத்தின்மீதே

மூர்த்தருளிவந்து, இந்திரனுக்கு அசுரர்களைச் செயங்கொளளும் வரமளித்து மறைந்தருளினர்.

இந்திரன் செங்கழுநீர்விநாயகரைப் பூசித்தான். இந்திரனுடன் காவிரிப்பூம்பட்டினத்திற்கு வந்த முனிவர்களும் தேவர்களும் அத்தலத்தின் கண்ணே அளவில்லாத சிவலிங்கமூர்த்திகளைக்கண்டுஅன்போடு அருச்சித்தார்கள்.

அகத்தியமுனிவர் அகத்தீசுரரையும், மார்க்கண்டமுனிவர சங்கமுகேசுரரையும், ஆங்கிரசமுனிவர் தாந்தோன்றியீசுரரையும், காசிபமுனிவர் பல்லவனேசுரரையும், வசிட்டமுனிவர் முத்தியப்பேசுரரையும், கௌதமர் பிரியாவிடங்கேசுரரையும், புலத்தியர் திருமேனியழகரையும் பூசித்தார்கள். உபேந்திரன் முருகக்கடவுளைப்பூசித்தான். காவேரியின் றென்பாலுள்ள நாகராசன் பூசித்த நகேசுரரைத் தேவர்களும் முனிவர்களும் பூசித்தார்கள். சாயாவனத்தின் றென்பாலாகக்காவேரிக்கரைவரையிலும் நூறு சிவலிங்கமூர்த்திகளைத் தேவர்களும் முனிவர்களும் பூசித்தார்கள்.

காவேரிசங்கமத்திலே ஸ்நானஞ்செய்து, சாயாவனேசுரரைத்தொழுது, திருவெண்காட்டிற் சென்று முக்குளத்தின் மூழ்கி, சுவேதாரண்யேசுரரை வணங்கி, மீண்டுவந்து, காவேரியில்நீராடி, சாயாவனேசுரரைத் தொழுபவர்கள் பிறவித்துன்பத்தினின்றும் நீங்குவர்.

---

## இந்திரன்பிடிகைபெயர்க்குஞ் சருக்கம்.

---

வஞ்சகவவுணர்தம்மைவதைத்திடவரங்கள்பெற்றே
மஞ்சுவாகனன்புகாரின்மகிழ்ந்தினிதிருக்கும்வைக
லஞ்சினுங்கொடியரானவசுரர்வானுடுமுற்று
மஞ்சவேதுருவியண்டர்திபனைக்காணாரானார். (௧)

மாதவன்வாழுஞ்செல்வவைகுந்தம்புகுந்துதேடித்
தீதுசேரவுணர்யாருங்கண்டிலர்தெய்வவேந்தைப்

போதினானுலகந்தன்னிற்புக்கெங்குந்திருவிக்காணார்
சோதியாங்கடவுள்மேவுஞ்சுந்தரக்கையிலைபுக்கார். (௨)

அம்மலையிடத்துங்காணாரம்பொன்மேருவினுங்காணார்
தம்மையேநிகரும்யோகமுனிவரர்தமைத்துரத்திச்
செம்மணித்தேரிற்செல்லுந்தினகரன்றன்னைத்திங்க
ளம்மையையடர்த்தேயட்டதிசையினும்புகுந்தாராய்ந்தார.

அத்திசைகளினிருந்தோர்யாரையுமடர்த்தாங்குற்ற
மத்தவாரணங்கடம்மைவருத்திவானிறைவர்க்காணார்
சித்தர்களியக்கர்முன்னோர்நடுங்கிடச்சினமீக்கொண்டு
ருத்திரவினைகள்செய்யுமவுணர்கள்குழுமினாரால். (௪)

கூடியவசுரரண்டகோளகைமுழுதுஞ்சென்று
தேடியுங்காணாராகிச்சிவந்துவாய்மிகப்புலர்ந்து
வாடியேகவர்ச்சியுற்றுமனமிகக்கலங்கும்போதி
னாடியேதவத்தான்மிக்கநாரதமுனிவன்வந்தான். (௫)

வந்தமாமுனியைக்கண்டுமனந்தனிலுவகைபொங்கித்
தந்தைதாய்தம்மைக்கண்டதன்மைபோலசுரர்யாரு
முந்தரியாசனத்தின்முகட்டினில்வைத்திறைஞ்சிப
பந்தபாசங்கள்பாற்றுமுனிவனைப்பரவினாரால். (௬)

செஞ்சடைமுடிதுளக்கிச்சிறந்தயாழ்முனிவன்செப்புங்
கஞ்சமாமலர்முகங்கள்கதிர்செயாக்கருமமியாதிங்
கெஞ்சிடாதுரையுமென்னவிரக்கமிலவுணரெல்லா
மஞ்சியேவாய்புதைத்தங்கவருடன்விளம்பலானார். (௭)

புரந்தரனொளித்ததிக்குப்புலப்படாமையினாலைய
நிரந்தரங்கவற்சிகூர்ந்தேம்யாமெனநிகழ்த்தலோடும்
வரந்தருமுனிவன்கேட்டுமனமகிழ்ந்தவரைநோக்கித்
திருந்துவானவர்தங்கோமானுறைவிடஞ்செப்பலுற்றான். (௮)

சுடர்ப்படையவுணர்காள்யாஞ்சொல்வதுகேண்மினுங்க
ளடற்செருவஞ்சியேகிப்புகாரினிலமரர்கோமா
னுடற்குயிரன்னவும்பர்தம்முடனுவந்துகூடி [ன்.
யிடர்ப்படாதிருக்கின்றானங்கெனமுனியிசைத்துப்போனா

அவ்வுரைகேட்டபோதிலவுணர்வாயாரநக்குச்
செவ்வியகிரிகள்போலத்திண்புயம்வளரப்பெற்று
மைவரையொருங்குகூடும்வண்மைபோற்குழுமிநின்று
பவ்வமிக்கொலிமுழக்கும்பான்மைபோலார்ப்பரித்தார். (௧0)

கவனவாம்பரிக்குழாமுங்கரடகுஞ்சரக்குழாமு
நவமணித்தேர்க்குழாமுநண்ணுகாலாட்குழாமும்
புவனிமீதெழுவித்தார்கள்பொற்பணிமுடிசேர்சேட
னிவையெலாம்பொறுக்கலாற்றாதெனச்சிரநடுங்கலுற்றான்.

இத்திறங்கோடிகோடிசேனைகளிடைவிடாமன்
மொய்த்தலும்புகாரைநோக்கிமுரணுடையவுணத்தியோ
ரொத்ததிண்டிமங்கள்பேரிசல்லரியொளிசேர்சங்கம்
பத்தவெம்முரசமாதியொலித்திடவெழுந்தாரன்றே. (௧௨)

சேனையாலெழுந்ததூளிதினகரன்றனைமறைத்தல்
வானவனிவனென்றெண்ணிக்காட்டிடாவளமைபோலும்
பானையின்கடநீர்மாவாயமர்ந்திடுவிலாழியார்நீர்
சேனையாய்க்கொண்டல்வந்துசொரிதலைநிகர்க்குமம்மா ()

வழெனுந்தீவினுள்ளோரேழ்பெருங்கடலினுள்ளோர்
காழும்பாதலத்தினுள்ளோர்தடவரையகத்தினுள்ளோ
ரூழிகாலத்தின்காறுமுள்ளதாமாயுளுள்ளோர்
சூழுவாராழியென்னத்தொலைவிலாவசுரர்மாதோ. (௧௪)

வேறு.

குண்டலங்குழைமீதிருசுடரெனக்குலவத்
திண்டிறறசிரச்செம்மயிரெரியெனத்திகழ
வண்டகோளகைமுகடுமட்டளவிடயாக்கை
மண்டியேமிகுந்தெழுந்தனர்வாளெயிற்றவுணர். (௧௫)

உருமிடித்ததுபோன்றதோர்குரலினருயர்ந்த
கருமுகிற்கணமொத்திடுமெய்யினர்கழற்கால்
விருதுபெற்றவர்மடங்கலாமெனவருவிறலோர்
நிருதரானவர்வன்கணர்பாவத்தினிறைந்தோர். (௧௬)

சத்தசாகரமனைத்துமேகளர்ந்தெழுந்தகைகண்மை
யொத்துவிரக்கொணப்பாதகத்தானவரொருங்கே

பத்திநாலுமாமுலகத்தினிடமின்றிப்பரந்து
மத்தவாரணமடங்கன்மீதேறியேவந்தார். (௧௭)

வந்ததானவர்தமைக்கண்டுமகதியாழ்முனிவன்
சிந்தைநன்மகிழ்வெய்தியேபுகாரினிற்சென்றங்
கிந்திரன்முதலாகியவிமையவர்க்கெல்லாம்
பிந்திடாதபோர்த்தானவர்வரவுபேசினனால் (௧௮)

உரைக்குமுன்னமேயுருமெனப்பரிகரியொலியு
மிரைத்ததேர்மணியோசையுநிசாசரரொருங்கே
யிரைத்தவோசையுமெழுந்திடத்தானவக்கொடியோ
ரரைக்கணத்தினிலாங்குவந்தமர்செயவடுத்தார். (௧௯)

அடுத்தகாலையிலருந்தவமுனிவரரமரர்
நடுக்கமெய்தியேநற்புகார்வந்துறைநாதா
மடக்கொடிக்கொருபாகனேமறலியையுதைக்க
வெடுத்தபாதனேயேழையேங்களுக்கருளென்றார். (௨௰)

என்றகாலையிலிபமுகன்சாத்தனேழ்சத்தி
மன்றலங்கடம்பணிந்தவன்வயிரவன்முதலோர்
நன்றிமேவிடுமந்நகர்நலிவுறுவண்ணம்
வென்றிமேவுநல்வாயிலின்மேவியேகாத்தார். (௨௧)

கற்றைவார்சடையிறையவர்தந்திருக்கருணை
பெற்றவிந்திரன்றழைசெவிக்கிம்புரிபிறங்கி
யுற்றநான்குகோட்டும்பலைவிளித்துநம்மீதிற்
செற்றமேவியவவுணரைச்செறுவெனவிடுத்தான். (௨௨)

தவளவாரணமவ்வுரைகேட்டலுந்தருக்கி
யிவணடைந்திடுங்கொடியராமவுணர்களெல்லா
மிவறுமாறுபோர்புரிந்திவண்மீளகுவலென்றே
பவனைநாடனைப்பணிந்துசென்றதுமிகச்சினந்து. (௨௩)

வேறு.

கிம்புரியணிசெறிகொம்புவளர்கிளரொளிமதியெனவிலகியிடத்
தும்பிகடழைசெவிதனிலுலவிச்சொரிமதவருவிகள்பருகியிடப்
பம்பலிறெடுகளதெளதமெனும்பருமையுறுங்கிரிவருவதுபோற்றே
றும்பர்கண்மிகமகிழ்வுறவவுணருயிர்கொளவந்ததவ்வொண்களி

மணியொலி கணகணகணகணெனவளரெறிழின் மிகுமொளிம
ருவியகிங், கிணிமொலிகலகலகலகலெனக்கிளாநுதலிலகியவணி
யசைய, கிணையறுமுரணிகரங்கிரிமீதிலகு சதங்கைகள் சலசலெ
னப, பணிமுடிபயில்புவிகிடுகிடெனப் பதறநடந்தது வெள்ளிப
மே. (௨௫)

கடதடதனைழ்செவியசைவுறலாற்ககனமதுறைபவர்வெருவிட
நெடியகைவாலுறுமிர்தலிலுனிலவுறுமிதுனமுமஞ்சியிட
வெவையைபிகரிருவிழிகனுருவஞ்சகவவுணர்கண்மிகவலற
நொடியினிலடையலர்படைமுழுதுந்நூறநடந்தது வெள்ளிபமே.

ஓடிடுங்கடியகரமதனுமேலாங்குறவளர்தருதருவினுறங்
கோடுகடனைமுறிசெய்புமணற்குன்றுகளைச்சரணாலிடறி
நீடியகடலகளோரேழினையுநெடியதொர்திடரெனவேபுரியுஞ்
சேடனும்வெருவுறவழிவைத்தேதிரிதருமகபதிவெள்ளிபமே. ( )

மறவியைபிகரெனவவுணர்தலைமாபுகையிருபுயமலைகளெலாம்
நெறநெறநெறநெறவெனவேபோர்மிடத்தினிலுரனேரடியா
லுறம்திசெய்தவருடலையெலாமும்பரின்மீதெறிசெய்துவருக்
தறுகணர்முதுகிட்டேவெருவத்தனியமர்செய்ததவ்வெள்ளிபமே

மலையெனநீள்கரமதுதனிலேலார்வன்மையுறும்பெருமுசலமெடுத்
தலைதருமவுணர்களிரதமெலாமொண்டுகளாகியொழிந்தேதகக்
கொலைசெறிமதகரியிவுளியெலாங்குடர்பிதிர்படமோதிக்குருதி
யலைமிகுநதியெனவோடவேயமர்செய்ததுதனிவெண்கரியே. ( )

தானவர்மூளைகள்சிதறுதலுந்தருசெங்களமிகுகுருதிகொள
வானவரரசனுமனமகிழமறலியுமிரையினிமிகுதியெனப்
பானுவினுதயமெனக்குருதிபடிதருமுருளையைநிரைநிரையாய்
வானிடைகோடுகளால்வீசிமண்டமர்செய்தது வெள்ளிபமே. ( )

வில்லொடுகணைதொடுகைத்தலமும்மேவிடுதிகிரியும் வரிசைபெறும்
பல்பலபடைகளுஞ்சிதறிவரும்பற்றலருடலுமழிந்திடவுங்
கல்லெனுமிருபுயநெரிதரவுங்கனல்சொரிமணிவிழிசிதறிடவுஞ்
சொல்லுறுவண்கரமுசலத்தைக்கொண்டுடைத்ததுசிதகளிறே.

ஆர்த்தனருருமிடியெனவவுணரனைவரும்வெண்கரிதனையணுகித்
தார்த்தனர்சொரிகணைகைம்முசலந்தூளிபடுத்தியருந்துதலும்

கணைமலகோபதிசொரிதலுமேகண்டகவவுணர்கள்சிரமுதலாத
துணிபடவிழ்தருயிர்தொலைதலுமேசொரிதனர்மலர்மழையும்ப
ரெலா, மிணையறமுழவொடுதுந்துபிகளெங்குமுழங்கினவெழின்
மேவும, பணைமுலையரிவையர்நடனமிட்ட பண்ணவரின்பொடுது
மானினரால் (௪௦)

வேறு.

ஊழ்தலுற்றவவுணர்களொண்புனீர்
வீழும்யானையைவீரரைவெம்பரி
சூழுந்தேரைத்துரந்துகொண்டேகுத
லாழிமேலமர்க்கேகுந்தலொக்குமே. (௪௧)

குருதியாற்றிற்குளித்திடுங்கூளிகள்
பெருகுகின்றவவுணப்பிணங்களைக்
கருதுகின்றகழுகொடுபோறுக
ளுருவித்தின்கிளையோடுநகருமால் (௪௨)

வேறு.

அவுணப்படையுதிரங்கடலணியாயுதமீனுங்
கவனப்பரிதிரைமூளைகள்களுலுங்கொழுநுரையாம்
அவணேபொலிமணிநித்திலமாரந்திகழலவன்
நவமுற்றிடுகுடரேதுகிர்நற்றேர்விடுகலமே. (௪௩)

போற்றார்படைதானிப்படிபொடியாகவுமிதுவெண்
ணீற்றானருள்வரமென்றுநினைந்தேதிசையுள்ளோர்
தோற்றார்திதியின்மைந்தர்கடொலைந்தாரெனத்துள்ளிக்
காற்றுமெனவந்திந்திரனைக்கண்டுகளித்தார். (௪௪)

செந்தாமரையாள்கேள்வனுமனமூரநதிமேதவுரு
அந்தாரிபமுந்தும்மகபதிவெஞ்சமர்காண
வந்தார்தையித்தியர்யாரையுமாய்த்தானெனமகிழ்ந்தே
தந்தார்நறுமலர்வாசவனேற்றெண்முடிதரித்தான் (௪௫)

வண்டார்மதவயிராவதமாவாரணமேறிக்
கொண்டான்மருத்துவன்வானவர்குழுமிப்புடைவரவே
விண்டாவிடவேவெற்றிகொண்முரசத்தொலிபரவ
வண்டாள்பல்படுசெம்புலமதினின்றுமகன்முன். (௪௬)

அகன்றே நெறிசெல்போதினிலங்கம்முழுதுங்கண்
மிருந்தேதிகழரிவிண்மயனைக்கொண்டுமுன்மேரு
நகம்போற்சிவனார்மேவிடநற்பொன்னினியற்று
செகம்போற்றிடுசாயாவனத்திருக்கோயிலைக்கண்டான் ()

கண்டானுள்ளமகிழ்ந்தானிருகரங்கூப்பினன்சிரமே
லண்டார்தமையடல்செய்திடுமாசண்டலனன்பாய்ப
பண்டேகியநெறிவந்துயர்பலநல்கிடுபொன்னி
தண்டாதுபுகுஞ்சங்கமுகத்தின்கரைசார்ந்தான். (சஅ)

காவேரிசங்கமமாடினன்கருதுங்கநிதிபல்வும்
பூவார்சுரர்கட்கீந்துபின்பொன்னிப்புனன்மூழ்கி
மேவார்புரமுன்செற்றிடுவிமலன்னருண்மேவுந்
தேவாதிபன்வாழுந்திருச்சாய்க்காட்டினிற்சேர்ந்தான் ()

வேறு.

அன்னமாநகரமரர்கோனணைதலுமணிகொள்
சொன்னகும்பத்திற்புதுப்புனனிறையவுந்துலங்கி
மன்னபேவியபசரதோரணங்களுபலிந்து
பொன்னின்மாநகர்போற்பொலிந்திருந்ததையன்றே (ருo)

மாமணித்திருவிமானத்தைவலஞ்செய்துமறைதோ
பூமன்மாலினுக்கரியவன்பொற்பதமிறைஞ்சிக்
காமனைப்பொடிபடுத்தியகடவுளேயென்றுஞ்
சோமனைப்புனைவேணியாவென்றுமேதுதித்தான். (ருக)

பத்தர்போற்றிடும்பரமனேபழமறைமுனிவோர்
சித்தர்சாரணரமரர்கள்பணிந்திடுஞ்சிவனே
சுத்தனேயெனையாண்டிடுங்கருணைவாரிதியே
முத்திநன்னெறியளித்திடுமூர்த்தியேயென்றான். (ருஉ)

என்றுபூசனைபுரிந்துளமகிழ்ந்தெழுந்திருந்து
துன்றுமவானவர்தம்மொடுஞ்சுரருலோகத்துக்
கின்றுபோகுவலெனநினைந்திந்திரனிறைவாழ்
நன்றுசேர்மணிப்பெட்டகந்தனைநயந்தெடுக்க. (ருங)

அந்தமாமணிப்பீடிகையுதிலெழுந்தருளு
மெந்தையார்திருவருளினுலெடுபடாமையினால்

வாதுவந்திமையோர்கடம்வலியினுலெல்டுக்க
வந்தினின்றெடுபடாமைகண்டும்பர்கோனயர்ந்தான். (௫௪)

பின்னர்வாசவன்பிரானுறை நபெட்டகமேவு
மன்னுபொற்றிருவிமானத்தைவாம்பரிபூண்ட
பொன்னெடுங்கிரிபோன்றதோர்தேரினிற்பிணித்தே
யன்னவாம்பரிகளையுகைத்தலுமதை முயன்று. (௫௫)

மன்னுவன்மைபூண்டிழுத்தலும்வரனுறைகோயி
லென்னவுஞ்சிறிதேனுமேயசைந்திடாதிருக்க
வன்னதன்மையுமமரருக்கிறையவனறிந்து
மின்னுமோடைபூண்வெண்களிற்றினைவிளித்துரைப்பான். ()

பனைக்கைவாரணத்தரசநின்பாங்குறுபலத்தா
லினைக்குமுன்னமிச்சின்கரமெடுவெனநிகழ்த்த
வனைத்துலோகமுமதிரவத்தந்திபொற்றளியை
முனைத்தசைத்திடவானவர்களுமுறையிட்டார். (௫௭)

தந்தநான்குறுதந்திபொற்றளியினையசைக்கு
மந்தவேலையிலருளுருவாயனைத்துலகுந்
தந்தவம்பிகையச்சமுற்றரன்செவிசார்வா
னொந்துகூவினளேக்குறுந்திருநுதலிறைவன். (௫௮)

கூவுந்தன்மையைக்கேட்டனனுமைதனைக்குறித்துத்
தேவியஞ்சலென்றுரைத்துத்தன்றிருவடிநுனியைப்
பூவிலூன்றினன்பொற்றளிசலிப்பின்றிப்பொலிந்த
தோவிலாதுபாதலமெலாமகழ்ந்ததவ்வும்பல். (௫௯)

குழியானைகூர்ங்கோட்டினுற்றுதைந்துகீழுள்ள
வேழுலோகமுஞ்சினகரமெடுப்பலென்றகழ்த
லாழியான்சிவனடிபெறவேனமொன்றாய்ப்பல்
லூழிகாலமுன்னிலமிடந்ததனையேயொக்கும். (௬0)

மைநிகர்த்திடும்வாலியமதகரிமருப்பா
லுரைசெய்பாதலத்தளவுமேயகழவுவ்வழியா
லரவவேந்தினதாயிரம்பணமுடியமைந்து
நிரைகொண்மாமணிச்சாயைமுப்புவனமுநிறைய. (௬௧)

வந்துசூழ்ந்திடுந்தன்மையையவானுமேளோர்கண்டே
யிந்தநன்னகர்க்கிலங்குசாயாவனமெனும்பேர்
தந்துபோற்றினர்பணிந்தனர்தானவாறிழியுந
தந்தநான்குறும்வாலிதாந்திருமிறத்தந்தி. (௬௨)

முற்றுந்தன்னுறுவலியொருங்குறமிகுமுயற்சி
யுற்றுநீண்டவொண்கரங்கொடுசுற்றிமேலிழுக்கச்
சற்றுமத்திருத்தளிபெயராமைபாற்றளர்ந்தே
வெற்றிவேந்தனுக்குரைத்ததுவேந்தனும்வெருவி. (௬௩)

வந்துகண்டிஃதெம்பிரான்செயலெனவணங்கி
யிந்தவற்புதந்தன்னையான்கண்டதுமிலையென்
றந்திமேனியாயடியவர்க்கெளியனேயமுதே
முந்துமாமறைமுதல்வனேயெனமுறையிட்டான். (௬௪)

வேறு.

நெடியோனேடுஞ்சரணுமுறையோ
சடையார்கொன்றைத்தாராய்முறையோ
கடுமுன்னுகர்கங்காளாமுறையோ
துடிசேரிடையாடுணைவாமுறையோ. (௬௫)

ஞானக்கனியேநம்பாமுறையோ
தேனிற்றிகழ்தீஞ்சுவையேமுறையோ
கூனற்பிறைசேர்குடிலாமுறையோ
வானிறறிகழெம்மரசேமுறையோ. (௬௬)

பண்டாமடியார்வினைபாறிடவே
தண்டாமரைநேர்தாடந்தருளு
மண்டாமுறையோவமலாமுறையோ
வெண்டாவியசீரிறைவாமுறையோ. (௬௭)

வேறு.

இப்படிமுறையோவென்றேஇந்திரனடுங்கியேத்த
வப்பணிசடையானெம்மையாளுடைவிடைமீதேறி
யொப்பறுகணத்தர்தம்மோடுயர்தவமுனிவர்சூழ
மைப்புயலூர்திமுன்னேவந்தருள்செய்தானன்றே. (௬௮)

வானவர்க்கரசன்கண்டுமலரடிவணங்கியேத்தித்
தேனமர்கொன்றையாயென்சிவலிங்கமூர்த்திதன்னை
வானிடைக்கொடுபோய்வைத்தேமணமிகுமலர்கள்கொண்டு
யானருச்சனைசெய்தேத்தவருளெனவண்ணல்கூறும். (௯)

இத்தலஞ்சிவலோகத்தினெண்மடங்கதிகமாகு
முத்தவில்விலிங்கத்துற்றாயீங்குவைகிப்
பத்திசேரடியார்க்கென்றும்பண்புறுபுத்தியோடு
வித்தசமுத்தியீவான்விரும்பினேமதனால்வேந்தே. (௧௦)

இங்குநின்றிவ்விலிங்கமெடுபடாதினாஞ்செய்தோங்
திங்கமார்பரார்த்தபூசையிதற்குநீதுலங்கச்செய்வி
பங்குனித்திங்கடன்னிற்பாங்குறுவிழாவுஞ்செய்தி
பொங்குசீர்ப்பரார்த்தபூசைபுரிதிறம்புகலக்கேட்டி. (௧௧)

அயன்முகந்தனிற்சென்றித்தவந்தணராரோனோர்பூசித்
துயர்பதமபெறுதற்கிட்டவிலிங்கமேயுரித்தாமன்னோர்
வியனிலநதனிற்பாரார்த்தம்விரும்பியேதீண்டுவாரேற்
புயல்வளமறும்புவிக்குப்புரவலர்க்காகும்பாவம். (௧௨)

நம்முகலயின்பிறந்தநற்றவக் * காசிபாதி
யைம்முனிவரர்கள்கோத்திரந்தனிலவதரித்து
மெய்மமைசேரபிடேகாந்தம்விருப்பொடுபெற்றோர்தாமே
செம்மைசேர்பரார்த்தலிங்கந்தீண்டுதற்குருகராவார். (௧௩)

உரைத்திடுகாசிபாதியுறுவர்கோத்திரத்தாரேனும்
பரித்திடாதபிடேகாநதம்பரார்த்தமாமிலிங்கந்தீண்டிற்
றரைத்தலந்தனக்கும்வேந்தன்றனக்குமேசாருந்தீங்கு
வரைச்சிறகரிந்தோயன்பர்வணங்கிவாழ்வுறும்பொருட்டால். ()

இத்தலத்திவ்விலிங்கம்பரார்த்தமாவிலங்கச்செய்தோ
மத்திரமதனாலாதிசைவரிலார்வத்தோடே
யுத்தமவபிடேகாந்தமுற்றவர்தம்மைக்கொண்டே
நித்தியத்துடனேநைமித்தியந்தனைநிலவச்செய்வாய். (௧௫)

அன்புநின்பாலிற்கொண்ட வாரிபனுண்டளபபான்
றன்புடையனுகியன்றேன்றுண்மிசைவீழ்நதிறைஞ்சி

* காசிபர்-கௌதமர் - பாரத்துவாசர்-கௌசிகர் - அகஸ்தியர் இவர்
களே ஏ முனிவர்களாவார்.

அன்பொடுதுதித்துவேறோரிலக்கணமமைந்ததான
கொன்பெறுமிலிங்கமந்தக்குரவன்பாற்பரிவாற்பெற்றே; (எசு)

ஆன்மார்த்தபூசைசெய்துகொண்டுநீயம்பொனாட்டின்
பான்மேவிச்சுத்தமாரும்பல்போகந்துய்த்துவாழ்ந்து
மேன்மாசுதீர்த்துமேலாம்வீடருள்வோமென்றோதிப்
பான்மாணுமொழிமான்வாமப்பரமனவ்விலிங்கம்புக்கான். (எஎ)

முற்றிற்று.

## சருக்க சங்கிரகம்.

இந்திரன், அசுரர்களைக் கொல்லுதற்குச், சிவபெருமானிடத்து வரம்பெற்றாக காவிரிப்பூம்பட்டினத்தில் வசிக்கின்றநாளில், அசுரர்கள் தேவலோகமுழுதுந் தேடி யிந்திரனைக் காணாமல் பின்பு வைகுந்தத்திலும் சத்தியலோகத்திலும் கைலாசத்திலும் மகாமேருவிலும் அட்டதிசையிலும் புகுந்து தேடினார்கள். அவ்விடங்களிலுங்காணாமல், மனவருத்தமுற்று ஓரிடத்தில் கூடியிருந்தார்கள். அச்சமயத்தில் நாரதமுனிவர் அவ்வசுரர்களிடத்திற்சென்று, இந்திரன் தேவர்களுடன் காவிரிப்பூம்பட்டினத்தில் வசிக்கின்றானென்று கூறிப்போயினார். இவ்வார்த்தையைக்கேட்ட அசுரர்கள், மகிழ்ந்து யானைக்கூட்டங்களும் குதிரைக்கூட்டங்களும் தேர்க்கூட்டங்களும் காலாட்கூட்டங்களுமாகிய எண்ணில்லாத நால்வகைச்சேனைகளுடன் காவிரிப்பூம்பட்டினத்தை நோக்கிச் செல்லுகையில் நாரதமுனிவர் இந்திரனிடத்திற்சென்று, அசுரர்கள் யுத்தத்திற்கு வருதலைக்கூறினார். அசுரர்களும் காவிரிப்பூம்பட்டினத்திற்கருகே வந்து சேர்ந்தார்கள். அஃதறிந்த இந்திரனும் தேவர்களும் முனிவர்களும் சிவபெருமானை வணங்கி உமாதேவியாரை யோர்பாகத்திலுடையவரே! இயமனை யுதைத்த திருவடியையுடையவரே! யேழையேங்களைக் காத்தருளுமென்று பிரார்த்தித்தலுஞ் சிவபெருமான் திருவருளினால், விநாயகர், ஐயனார், சத்தமாதாக்கள், முருகக்கடவுள்முதலியோர் அந்நகரத்தின் வாயில்களைக் காத்துக் கொண்டார்கள். அப்பொழுது இந்திரன் அசுரர்களை [illegible] செய்யும்படி வெள் [illegible]

யானது மிகுந்த கோபத்தோடுஞ் சென்று அசுரர்களையெதிர்த்து யமன்போலச் சினந்து அவர்களுடைய தலைகளும் மார்புகளும் கைகளும் நெறநெறவென்று நெரியும்படி உரல்போன்ற அடிகளான் மிதித்துக்கொன்று, உடல்களை ஆகாயத்திலெறிந்தும், துதிக்கையில் ஓர் இருப்புலக்கையைப் பிடித்துக்கொண்டு, இரதங்களைத் தூளாகும்படி யடித்தும், யானை குதிரைகளைக் குடல்சரியும்படி யடித்தும் போர்செய்யும்போது அசுரர்கள் ஆரவாரித்துவந்து, பாணங்களைச் சொரிந்து வெள்ளையானையின்கையிலுள்ள இருப்புலக்கையைத் தூளாகச்செய்து வெள்ளையானையை வருத்துதலும் வெள்ளையானை கோபங்கொண்டு ஓர் பெரிய மரத்தைப் பெயர்த்துத் துதிக்கையிற்கொண்டு யானைகளையுங் குதிரைகளையுந் தேர்களையுந் தூளிபடும்படியடித்துக் கணக்கற்ற அசுரர்களையுங்கொன்றது. அச்சமயத்தே அசுரர்கள்நெருங்கி வெள்ளையானையின் கையிலிருக்கின்ற மரத்தைப் பாணங்களான்முறித்து அவ்வெள்ளையானையைச் சூழ்ந்துகொண்டு பாசத்தாற் கட்டி, சூலத்தால் முதுகு பக்கம் பிடரிமுதலியஇடங்களில் குத்திவருத்துதலும் வெள்ளையானைசோர்வுற்றது. அதனை யிந்திரனறிந்து நால்வகைச்சேனைகள்சூழ யுத்தகளத்தையடைந்து பாசத்தையறுத்து விடுத்து, அவ்வெள்ளையானையின்மேற்கொண்டு, கையில் ஓர்பெரிய வில்லைப்பிடித்து நாணொலிசெய்தமாத்திரத்தில் பற்பல அவுணர்கள் இடிமுழக்கங்கேட்ட அரவம்போல் சிதறியோடிவருந்தினார்கள். அதனையறிந்தஅசுரவேந்தர்கள் கூடி யிந்திரன்மேல் பல பாணங்களை விடுத்தார்கள். இந்திரன் அக்கினியைக் கக்குகின்ற ஆயிரம் அஸ்திரத்தைவிடுத்து, அசுரர்கள்விட்ட அஸ்திரங்களையும் அவர்கள் தலைகளையும் அறுத்தான். தலையற்ற அசுரர்களெல்லாம் பிரமன்கொடுத்த வரத்தாற் றலைபெற்றெழுந்து யானை குதிரை தேர்களிலேறிப் பற்பல ஆயுதங்களைக்கொண்டு இந்திரனைவந்து சூழ்ந்துகொள்ள அப்பொழுது இந்திரன் சாயாவனேசுரரைத்தியானித்து அவர்கொடுத்தருளிய வரத்தை நினைந்து, அவுணர்களுடைய சிரம் தோள் மார்பு கைகால்முதலிய அவயவங்களை அறுத்துக்கொல்லும்படி பல பாணங்களை விடுதலும் அப்பாணங்கள் சென்று அவர்களுடைய சிரமுதலியவைகளை யறுத்

தலால் பகைவராகிய அசுரர்களெல்லாரும்இறந்தொழிந்தார்கள். இந்திரன் மனமகிழ்ந்து போர்க்களத்தினின்றும் நீங்கி, சங்கமுக தீர்த்தத்திலும் காவேரியிலும் ஸ்நானஞ்செய்து, சாய்க்காட்டை யடைந்து, சிவபெருமானைப் பூசித்து நமஸ்கரித்துத் துதித்து, தேவர்களோடும் "இன்று வானுலகத்திற்குச் செல்வோமென்று நினைந்து, ஆன்மார்த்தலிங்கமூர்த்தி யெழுந்தருளியிருக்கும் பொற்பீடிகையை யெடுத்தமாத்திரத்தில் அந்தப்பீடிகையானது சிவபெருமான்றிருவருளினால் எடுபடாமையால் வருந்திப் பின்பு சிவபெருமானெழுந்தருளியிருக்கும் பெட்டகம் வைத்திருக்கின்ற விமானத்தைக் குதிரைகள்பூட்டிய தன் தெய்வ விமானத்திற் பிணித்துக் குதிரைகளை நடத்தவும் அவ்விமானஞ்சிறிதும் அசையாதிருத்தல் கண்டு வெள்ளையானையை விடுக்க வெள்ளையானைசென்று விமானத்தை யசைக்கும்போது உமாதேவியார் கூக்குரலிடுதலும் சிவபெருமான் உமையே பயப்படாதே யென்றுசொல்லி யருளித் திருவடிதனியை யூன்றித் திருக்கோயில்அசையாவண்ணம்செய்தருளப் பின்னர் வெள்ளையானை தன் கொம்புகளால் விமானத்தைப்பாதல உலகத்தளவும் அகழ அவ்வழியினால் ஆதிசேடன்றிருமுடியில் இருக்கும் ரெத்நங்களின் சாயைவந்து புவிமுழுதும் நிறைதல்கண்டு தேவர்களெல்லாம் இந்நகர்க்குச் சாயாவனமென்று பெயரிட்டு வணங்கித்துதித்தார்கள். பின்னும் வெள்ளையானை, தன்றுதிக்கையால் விமானத்தைச் சுற்றிக்கொண்டு மேலே இழுக்கவும், அவ்விமானம் சிறிதும் அசையாமையால் வெள்ளையானை தளர்வுற்றது. இந்திரன்கண்டு பயந்து நடுங்கி இது சிவபெருமான் செயலென்று நினைந்து நமஸ்கரித்து முறையிடுதலும் சிவபெருமான் இடபவாகனமேற்கொண்டு தோன்றியருளினர். இந்திரன் நமஸ்கரித்தெழுந்து துதித்து, சுவாமி! அடியேன் விண்ணுலகத்திற்கொண்டுபோய் வைத்துப் பூசிக்கும்படி இச்சிவலிங்க மூர்த்தியைக் கொடுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தலும் சிவபெருமான் இந்திரனை நோக்கி இந்திரனே! இத்தலஞ் சிவலோகத்தினும் ஒன்மடங்குமேம்பட்டதாகும், நாம்இவ்விலிங்கத்திலே வீற்றிரு

ந்து, இங்குவந்து வணங்கும் அன்பர்களுக்குப் போகமோக்ஷ ங்களைக்கொடுக்க விரும்பினோம். ஆதலால் இவ்விலிங்கம் இவ் விடத்தினின்றும் எடுபடாமற் செய்தோம். இவ்விலிங்கத்திற்கு ப்பரார்த்த பூசைசெய்வித்துப் பங்குனிமாதத்திற் றிருநாட்செ ய்வாயாக. பரார்த்தபூசை செய்யுந் தன்மை எவ்வாறெனில் பிரமன் முகத்துப்பிறந்த பிராமணர் பூசித்துப் பலனடைதற்கு இட்டலிங்கமேயுரியதாகும். அவர்கள்பரார்த்த லிங்கத்தைத் தீண்டுவாராயின் புவியில்மழை குறையும். அரசர்க்குப் பாவமு ண்டாம நம்முடைய ஐந்துமுகத்திலும் பிறந்த காசிபன்முதலா கிய ஐந்துமுனிவர் கோத்திரத்திற்பிறந்து சமயதீக்ஷை விசே ஷதீக்ஷை நிர்வாணதீக்ஷை ஆசாரியாபிஷேகம் என்பவைகளை ப்பெற்ற ஆதிசைவர்களே பரார்த்தலிங்கபூசைக்குரியராவார். சொல்லப்பட்ட காசிபாதிமுனிவர் கோத்திரத்திற் பிறந்தவரா யினும் சமயமுதலபிடேகாந்தம் பெறாதவர்கள் பரார்த்தலிங்க த்தைத தீண்டினால், அரசர்க்கும் உலகத்துக்கும் பாவமுண் டாகும். ஆதலால் ஆதிசைவர்களில் அன்புடனே சமயமுதல் அபிடேகாந்தம் பெற்றவர்களைக்கொண்டே நித்தியநைமித்திய ஙகளைச்செய்வாயாக. உன்குருவாகிய வியாழனிடத்தே வேறொ ர்சிவலிங்கம் பெற்று ஆன்மார்த்தபூசை செய்துகொண்டு பொ ன்னுலகத்திருந்து, மேலான போகங்களை யனுபவித்து வாழ் வாயாக. மேல்மலபரிபாகத்தில் மோக்ஷத்தைக் கொடுப்போமு என்று சொல்லியருளி இந்திரலிங்கத்தின்கண்ணே புகுந்தரு ளினார்.

முற்றிற்று.

---

## ஐராவததீர்த்தச்சருக்கம்.

---

யாமுனிவரர்களெந்தாய்வாசவன்பூசைதன்னைப்
பூமியிற்பெயர்க்குங்காதைவிரித்துநீபுகன்றாய்மேன்மை
யாமயிராவதத்தின்றடத்தியலறைவாயென்னத்
தேமுரல்கொன்றையான்றாள்சிந்தைசெய்துரைக்குஞ்சூதன். (க)

தானவா றிழிபுஞ்செய்யபுகர்முகத்தவளமேனி
யானையத்திருச்சாய்க்காட்டினையர்தாள்வணங்கிநின்று
சேணிகர்விழியாள்வாமச்செல்வநின்சினகரத்தை
யானகழ்ந்திட்டபாவமெவ்வகைதீருமென்று. (௨)
வெருவனுற்றிரங்கும்வேலைவிண்ணிலோர்வாக்குத்தோன்றிப்
பொருவிலித்தளியைநின்றாற்பொற்புறுகிம்புரிப்பூண்
மருவுகோட்டாயீடுந்துவயங்குமிவ்வவற்றென்கீழ்பால்
வருநலமிகும்பாதாளமேழின்கீழ்மன்னுகங்கை. (௩)
அத்தகுபுனிதகங்கையாடிநீசாய்க்காட்டீசர்
உத்தமமலரடிக்கணோண்மலர்கொண்டுபூசை
பத்தியோடியற்றிற்பாவம்பாறுமென்றுரைக்கவெள்ளை
யத்தியத்திருமாற்றங்கேட்டத்தடநோக்குங்காலை. (௪)
கோதகல்பாதலத்திற்குலவியபுனிதகங்கை
பாதகநீக்கியார்க்கும்பரகதியளிக்குமாறு
தாதகிசூடுமெங்கள்சங்கரனருளினாலே
மீதெழுந்தத்தடத்தின்மிளிர்ந்துதேக்குற்றதம்மா. (௫)

வேறு.

விரைசெறிந்ததாதுலவியமென்முகிழ்விரிந்து
பிரசமூற்றியேநெட்டிதழ்க்கமலங்கள்பிறங்க
வரிவண்டின்னிசைமுரன்றனவண்மணிகொழிக்குந்
திரைபொருந்துமத்திருப்பெருந்தடந்தனின்மாதோ. (௬)
மன்னுமன்றலங்குவளையின்வண்டுகண்வளரத்
துன்னுமென்சிறைதுலங்குதேனின்னிசைபாடும்
பொன்னிறக்கவினேதிமம்பொற்புறுபொறிப்பேர்
மின்னையொத்தொளிர்செய்யபங்கயமலர்மேவும். (௭)
சிறந்தபைங்கமுகின்செழுங்குலைதனிற்றூவி
நிறைந்தசெந்நிறப்பழங்களைநிமிடத்திலுதிர்த்தே
நிறங்கொள்வெள்ளியின்றகட்டினைநிகர்த்திடும்வாளை
பிறங்குதாமரைமலர்மிசைப்பெட்டொடுதுஞ்சும். (௮)

வேறு.

இன்னவற்புதங்கள்கண்டேயிமைத்திடாநயனக்கைம்மா
அன்னபூந்தடத்திற்புக்கெம்மண்ணில்செங்கமலத்தாளை

அவல் — பள்ளம்.

முன்னிபெறுதித்தூமூழ்கிமுதல்வனையிமையோரேத்தும்
பொன்னிகர்சடையிற்கங்கைபுனைந்திடும்புனிதர்தம்மை. (௯)

புழையுடைககரத்தான்மொண்டுபுனிதமஞ்சனநீராட்டித்
தழைவுறவில்லங்கோங்குதாமரைசமூநீர்மௌவல்
வழைநரவீரங்கொண்டு *மாந்திரவிதியாற்பூசைச்
விழைவுறப்புரிந்திசர்க்குவிளைமிகுதூபதீபம். (௧௦)

இன்புறவெடுத்துக்கோட்டியினியமுக்கனிமுன்வைத்தே
யன்புறநிவேதித்தப்பொருலயந்தனைச்சூழ்வந்தே
யென்பரவெழிலார்கொன்றையிளமதிசூடுந்தேவர்
முன்புசென்றிறைஞ்சிமூவாமுதல்வனைபோற்றியென்று. (௧௧)

மனங்கரைந்தேத்துமேல்வைவரதர்சாய்க்காடரோமக்
கனப்புளைவார்கூவென்றகாரிகையொருபாற்காண
வினப்பொலிகணங்கள்சூழவெழிற்சிதவிடைமேற்றோன்றித்
தனப்பொலிநாட்டியானைதன்முகநோக்கிச்சொல்வார். (௧௨)

சிதகரிநின்பாலுற்றதீவினையாவுந்தீர்த்தோம்
இதமுறுநினகூர்ங்கோட்டாலிடந்தவித்தடநின்பேரான்
† முதமுறவிளங்கவென்றுமூவுலகினிலுள்ளோரு
மிதனிடைமூழ்கின்வேண்டுமெவற்றையுமவர்க்களிப்போம், (௧௩)

வேறு.

இனையபொய்கையைநினைத்திடிற்புகன்றிடிலிறைஞ்சிற
தனைகழற்புனையிந்திரனாகியேகளிப்பார்
வினையிரண்டையும்விட்டிநல்வீட்டினைவிரும்பித்
தனையுணர்ந்துமேயிருப்பர்நந்தாளிணைகருதி. (௧௪)

போற்றமுன்றடப்புனற்றிளைமீதினிற்புரளுங்
காற்றணைந்திடிற்பறவைசண்மிருகங்கள்கருத்துத்
தோற்றுமானிடர்புல்கொடிதுலங்குபாதவமு
மேற்றிகழ்ந்திடுநந்திருக்கைலையின்மேவும். (௧௫)

கருமமேநிறைந்திடுமயிராவததடத்தைக்
சருதியேவல்மன்புடன்காலினைச்செய்யிற்

---

* மாந்திரம்—ஆகமம்.
முதம்—இன்பம்.

பெருகிடுந்திரிபுவனத்தைவலஞ்செய்தபேறு
மரியசெல்வமுஞானமுமவர்க்களித்திடுவோம். (கரு)

இனையசுற்றடந்தெரிசிக்கிற்பாவமுமிடரும்
வினைகளானவுங்கவலையுமகன்றுமெய்ச்செலவந்
தனையுமேவுவர்தண்சுடர்க்கயிலையும்பெறுவர்
புனையும்வெற்றியும்புகழுநல்லருளுமெய்துவரால். (கஎ)

இந்தநற்றிருத்தீர்த்தத்தையெண்ணியன்புடனே
வந்தொர்வைகல்புக்காடினோர்வாண்மதிச்சடையுங்
கந்தரம்புரைகந்தரமும்முகனைந்து
முந்துமோர்மழவிடையுமேபெறுவரீதுண்மை. (கஅ)

வேறு.

செப்புமயிராவதப்பேர்த்தீர்த்தந்தன்னைத் திகழ்கரத்தாற்சி
ரந்தெளித்தோர் செல்வராவார், இப்புனலின் மூழ்கினர் நற்சுத
ரைப்பெற்றேயெழில்பரவுமகபதிபோலென்றும் வாழ்வா, ரொப்
பரியகரையிலனு வளவுசெம்பொனுவந்து மறையவர்க்கீந்தோரும்
பராவார், கைப்பதுமந்தனின்மாடமிழ்ந்துநீரைக்கருதி யாசமித்
தவர்தாய்கருச்சேராரே. (க௯)

வேறு.

இரவிமதிகலந்திடுநாட்பூரணையாடிப்பிறப்போடிலங்குமாசி
யிரவுமகஞ்சிவநிசிதைமாதத்தின்பிறப்புடனேவிருச்சிகத்திற்
பரிதிதினமிந்துதினமார்கழியிலாதிரைநாட்பரிந்துமூழ்கிப்
பரவிநியமம்புரியினயுதபரிமேதபலன்பலிக்குந்தானே. (உ0)

கதிரிரண்டிலரவணையுங்கிரகணகாலந்தன்னிற்கருதிமூழ்கி
விதிமுறைபஞ்சாக்கரத்தைச்செபிக்கிலொன்றுகோடியதாய்மே
ன்மையெய்து, மதிகவினையொடுபஞ்சபாதகத்தாறகன்றிடுவரரு
ள்பெற்றோங்கும், கதியடைவரிவர்பெருமை யிவ்வளவென்றெவ
ராலுங்கணிக்கொணாதால். (உக)

தருமவடிவாமயிராவததீர்த்தத்தடங்கரையிற்றயங்கவென்
றும், பருமலைக்கற்செங்கலினுற்படிவகுத்துச்சுற்றிய மண்டபமும்
டாங்காய், நிருமிதஞ்செய்தோர்புவியினினைவுற்ற பொருளெல்லா
நிரம்பப்பெற்றுத், திருவினராய் வாழ்ந்துபவக் கடனீந்திச் சிவ
லோகஞ்சேர்குவாரே. (உஉ)

வேறு.

அருணவுதயந்தனிலயிராவததீர்த்தத்திலாடிப்பின்
கருணைநூலின்படிநியமங்கருதிமுடித்தேவில்வமணம்
பரவும்பூவினமைப்பூசைபரிந்துபுரிந்தேநம்மடியார்க்
கிரணியமபோனகமீவோரிருக்குமுலகநம்முலகம். (உ௩)

புவனமொருமூன்றினும்விளங்கிப்பொருந்துதீர்த்தம்புகுந்தாடித்
தவமேசெய்வார்பலனிலுமித்தண்ணார்புனலோர்நாண்மூழ்கி
னவமேயறுநற்கோடிபலமளிக்குமுண்மையீதாகும்
உவமையகற்றுமித்தீர்த்தப்பணிபின்னுங்கேள்வெண்கரிநீ. (உ௪)

இலங்கியோங்குமித்தடத்தினெழிலார்தீரத்தந்தணர்க்குத்
துலங்குமாடையிருநிதியந்தூய ¶ வரிதாம்பூலமொடு
நலங்கொள்சுரபிமுதலெவையுநல்கியவர்சூழ்ந்திறைஞ்சிடுவோர்
பலங்கடமையிவ்வளவென்றேயனந்தனாலும்பகர்வரிதால். (உ௫)

வேறு.

நிலைமைபெறுஞ்சீரயிராவததீர்த்தநீராடிநீங்கிப்பொன்னி
யலைபுரளும்புனற்படிந்துசாயாவனேசர்பதமன்பாற்போற்றித்
தலைமைபெறுசங்கமதீர்த்தந்தோய்ந்து ‡சிதவனமுக்குளத்தின்மூ
ழ்கி, யிலகிபத்தின்றடம்படிந்திந்திரலிங்கங்காணமுத்தியீவோ
ங்கண்டாய். (உ௬)

வேறு.

என்றுபல்வரங்களீந்தேயிந்திரலிங்கந்தன்னிற்
பொன்றிகழ்கொன்றைவேணிப்புண்ணியன்புகுந்தபின்னர்
நன்றுறுவெள்ளையானைநாரிபாகன்றாளேத்திக்
குன்றிறகரிந்தவானோர்கோவின்பாற்குறுகிற்றன்றே. (உ௭)

வேறு.

மன்னும்வெண்கரிதீர்த்தத்தின்வளமெலாமுரைத்தா
யின்னும்வாசவனியற்றிடு § சிறப்பியம்பென்றே
பன்னுமாமறைமுனிவரர்தொழுதடிபணியப்
பொன்னின்வார்சடைமாமுடிச்சூதனும்புகல்வான். (உ௮)

முற்றிற்று.

---

¶ அரி—அரிசி. ‡ சிதவனம்—திருவெண்காடு. § சிறப்பு—திருவிழா.

## சருக்கசங்கிரகம்.

வெள்ளையானையானது, சாயாவனேசுரர் திருவடிகளை வணங்கிநின்று, சுவாமி! நீர் எழுந்தருளியிருக்கின்ற திவ்யவிமானத்தை யுதைத்தகழ்ந்தபாதகம் அடியேனுக்கெவ்வகையாற்றீருமென்று, பயங்கொண்டு வருந்தும்போது, ஆகாயத்தினின்றும் ஓர் திருவாக்குத்தோன்றி வெள்ளையானையே! இவ்விமானத்தைச்சுற்றிலும் உன்மருப்புகளாற்றோண்டப்பட்டு விளங்கும். பள்ளத்திற்றென்கீழ்பாலாகப் பாதாளத்திலிருக்கின்ற கங்கை இப்பொழுதுவரும். நீ அப்புனித கங்கையிலே ஸ்நானஞ்செய்து, சாயாவனேஸ்வரரைப் பூசித்தால் இப்பொழுதே பாவம்நீங்குமென்றுசொல்ல, அம்மொழியைக்கேட்ட வெள்ளையானை அதடாகத்தைநோக்குதலும் கங்கைபாதாளத்தினின்றும் வந்துநிறைந்தது. வெள்ளையானை அந்தத்தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து சாயாவனேஸ்வரரைப்பூசித்து வலம்புரிந்து நமஸ்கரித்துத்துதிக்கும்போது சாயாவனேஸ்வரர் இடபவாகனத்தின் மீதெழுந்தருளிவந்து, ஐராவதமே! உன்பாவத்தை நீக்கினோம். இத்தீர்த்தம் உன்பெயரால் "ஐராவததீர்த்தமென்று" விளங்கச்செய்தோம். இத்தீர்த்தத்தை நினைத்தோரும் புகழ்ந்தோரும் வணங்கினோரும் இந்திரனைப் போகங்களை யனுபவித்துப் பின் மோக்ஷத்தைப்பெறுவர். இத்தீர்த்தத்தில் அன்புடன் ஒருதினம் ஸ்நானஞ்செய்தவர் நம் சாரூபத்தைப் பெறுவர். இத்தீர்த்தத்தில் அமாவாசையிலும் பௌர்ணமியிலும் மாசிமகத்திலும் சிவராத்திரியிலும் தைமாதப்பிறப்பிலும் கார்த்திகைமாதத்து ஞாயிற்றுக்கிழமையிலும் திங்கட்கிழமையிலும் மார்கழித் திருவாதிரையிலும் ஸ்நானஞ்செய்து பிராமணர்களுக்கு வஸ்திரம் பொன் அரிசிமுதலிய தானங்கள் கொடுத்து வணங்குவோரடையும்பலன் இவ்வளவென்று ஆயிரநாவையுடைய ஆதிசேடனாலுஞ் சொல்லமுடியாது.

இத்தீர்த்தத்திற்கு மலைக்கல்லினாலுஞ் செங்கல்லினாலும் படியுஞ் சுற்றுமண்டபமுஞ் செய்தவர்புவியில் நினைந்தபொருளெலாம் நிரம்பப்பெற்றுவாழ்ந்து, பிறவிக்கடலை நீந்திச்சிவலோகத்தையடைவார்.

இத்தீர்த்தத்திலே மூழ்கிப் பின்காவிரியில் நீராடி, இந்திரலிங்கத்தைவணங்கி, பின் சங்கமுகதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து, *திருவெண்காட்டு முக்குளத்திற் படிந்து, சுவேதவனநாதரைப்பணிந்து மீண்டுவந்து ஐராவததீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, இந்திரலிங்கத்தைத் தரிசித்தவர்க்குப் பேரின்பத்தைக்கொடுப்போம் என்று சொல்லியருளி இந்திரலிங்கத்திற் புகுந்தருளினர்.

---

## திருவிழாச்சருக்கம்.

---

தெள்ளியவெள்ளிக்கிரிநிகர்கோயிற்செய்விக்க
வுள்ளிமனத்தரியன்பெருநூல்களுணர்ந்தோரு
மௌளலின்மயனை விளித்தொருபொற்றளியெம்மிறையாம்
வள்ளற்றிருச்சாய்க்காடர்க்கழகொடுவெனையென்றான். (க)

அம்மகவான்மொழிக்கம்முறைவேமயனன்போடுஞ்
செம்மணிமரகதவயிரேயம்மொளிசேர்முத்தம்
பைம்பொனராமணிகதிர்வச்சிரமுன்பலகொண்டே
யிம்மெனுமளவினியற்றினனற்றளியெழிலாக. (உ)

பொங்குமருத்தத்திருமண்டபமும்புனைகோலத்
துங்கமகாமண்டபமுமைநிலயஞ்சுடர்வீசும்
மங்கையர்தங்கிநடம்புரிமண்டபமரிலோனு
மைங்கரவள்ளலுமேவுறுதளியுமமைத்தேபின். (ஈ)

வண்டார்கொன்றைச்சடைநடராசர்வாழ்மன்றம்
பண்டருணான்முப்பொருடெளிவித்தபரன்கோட்டுந்
தண்டாமரையாள்சினகரம்வடுகன்றன்கோயில்
சண்டேசுரனுறைபொற்றளியுந்தான்செய்தான். (ச)

இன்னனபல்பலசினகரம்வேள்வியெழிற்சாலை
மன்னியபாகசாலையுடன்பலிவண்பீடம்
பன்னகநன்மணியாற்றிருமாளிகைபண்பாக
வன்னமுறும்பொன்வயிரங்கொடுதிருமதில்செய்தான். (ரு)

உத்தமமேனுடளவுமுயர்ந்திட்வுடுவேந்துஞ்
சித்திரபானுவுநாடொறும்விலகிச்சென்றேகப்

பத்தியின்மேலேழுல்கினர்கண்டுபணிந்தேத்தச்
சித்திரகோபுரமேருவைநிகரச்செய்தானால். (௬)

வேறு.

இனையநற்றிருப்பணிகளையியற்றியேயிமையோர்
புனைவனக்கெழில்வீதியும்பொற்புறவகுத்தே
பனிநெடுங்கதிர்தவழ்ந்திடுமாளிகைபலவும்
வனையுமாமணித்தேற்றியும்வளம்பெறச்சமைத்தது. (௭)

மகரதோரணவருக்கமும்வானுலாங்கொடியும்
பகருமாமணிப்புரிசையும்பற்பலவியற்றி
மகபதிக்குறைசெய்தனன்மகபதிதானு
நிகரிலிப்பணிகண்டுளமகிழ்ந்தனனேர்ந்து. (௮)

வேறு.

தருவுடைக்கடவுள்கோமான்சங்கரன்முகத்திற்றோன்றும்
பொருவில்சீராதிசைவப்பூசுரர்தம்மைக்கொண்டு
பெருகுறுமன்பாலாறுகாலமும்பிறங்குபூசை
திருவளர்சாய்க்காடர்க்குச்சிவாகமப்படிசெய்வித்தான். (௯)

மாசிலாச்சாய்க்காட்டீசர்மலரடிபணிந்துதெய்வத்
தேசிகற்றொழுந்துவேறோர்சிவலிங்கமூர்த்திபெற்றுப்
பூசனைநிறையார்வத்தாற்புரிந்துகொண்டென்றுங்குன்றாத்
தேசுறுகனகநாட்டிற்சென்றுவாழ்ந்திருந்தான்வேந்தன். (௰)

வேறு.

பொன்னியோங்குசாயாவனந்தன்னிலேபொருந்தி
மன்னிவாழ்ந்திடுமானிடர்வானவராவார்
துன்னுபாதவங்கற்பகதருவெனத்துலங்கும்
புன்னிடும்புகழ்ப்பசுவெலாந்தேனுவாய்ப்பயிலும். (௧௧)

தகைமையோங்குசாயாவனத்தலத்திணுக்கிணையாப்
புகலவேறொருதலமிலையுண்மையிப்புரமே
புகரில்புத்தியுமுத்தியும்பொற்புறவளிக்கும்
நிகழுமுண்மையீதாமெனப்புகன்றிடுநெடிது. (௧௨)

வளம்புனைந்தசாயாவனந்தன்னிலேவயங்குங்
குளங்களோடைகள்கூபங்களும்பராற்குயிற்றி

விளங்குபொய்கைகள்விரைகமழ்பொன்னிவாவிகளின்
உளங்கனிந்திடுமன்புடன்மூழ்கியேயோங்கும். (கங)

ஞானவேதியர்க்கிருநிதிமுதலியநயந்து
தானஞ்செய்பவர்சார்குவரீசர்சாரூபம்
பானலோடைநந்தனவனமமைப்பவர்பரனுக்
கானதொண்டுசெய்பவர்சிவலோகத்தினமர்வார். (கச)

புண்ணியங்களோருருவமாய்ப்பொருந்துசாய்க்காட்டி
னண்ணிஞோரதில்வாழ்பவர்தமக்கனநயந்தோர்
அண்ணருஞ்சிலைசெங்கலாற்றிருப்பணியிசைத்தோர்
வண்ணமாகயிலாயமாமலையினில்வாழ்வார். (கரு)

வேறு.

மகபதியிறைவர்சொல்லியருளியவாய்மையெண்ணி
யகமகிழ்ந்தருள்வெண்காடுற்றவிர்மதிசூடுவார்க்குத்
தகைமைசேர்மாசிதன்னிற்றவில்சீர்விழாநடாத்தி
நிகரில்சீர்ப்பொன்னிசூழுநெடும்புகார்ச்சாய்க்காடுற்றான்.

உற்றிடும்வானவேந்தனுழுவலன்பொடுசாய்க்காடர்
பொற்றிருத்தாள்பணிந்தப்புனிதர்க்குத்திருநாட்செய்யக்
கற்றமாமுனிவர்யார்க்குங்கருதுவானவர்க்கும்பூவி
லுற்றிடுமன்னர்கட்குமுறையழையாளுணர்த்தினுல். (கஎ)

காமனைப்பயந்தோன்பூமான்றன்னொடுங்களித்துவந்தான்
மாமறைவானோன்வாணிமாதொடுமகிழ்ந்துவந்தான்
தூமதிபரிதியங்கிசூழ்ந்தனர்வந்துகொன்றைத்
தாமமார்வேணிச்சாயாவனத்தர்தந்திருநாட்காண. (கஅ)

தேவர்கண்முனிவராமோர்சித்தர்கின்னரரியக்கர்
தாவில்சீர்நாகர்வந்தார்தராதலவேந்தர்வந்தார்
காவினுக்கரசன்கண்டுகளித்தனன்கடவுளோர்க
ளாவணநிறையுஞ்சாயாவனநகரலங்கரிப்பார். (கக)

ஆரணமுழங்கும்வீதியனைத்தினுமுவகைபொங்க
வாரணப்பிடரினேற்றிமணிமுரசறைவித்தார்கள்
தோரணம்புனைவித்தெங்குந்துவசமுநிறைத்தார்பொன்னாற்
பூரணகும்பம்வைத்தார்புனைமணிமாடந்தோறும். (உ0)

வாழையுங்கரும்புமோங்கிவளர்பசுங்கமுகுநட்டார்
நீழல்சேர்மணியுமுத்துநெடுஞ்சுவர்த்தலத்திழைத்தார்
சூழுறுதூணந்தோறுந்துலங்கரதனம்பதித்துத்
தாழையின்கனிகடேக்கிச்சமைத்தனர்மறுகுதோறும். (உக)

மணிமுடிவானோர்மன்னன்மஞ்சுசூழிமயமாதின்
கணவர்முன்புகன்றசைவாகமவிதிப்படிமீன்மாதத்
தணிபெறுபூர்வபக்கச்சட்டியிலறுமீனுளி
யிணையில்சாய்க்காடர்க்கேற்றுக்கொடியினையேற்றினானே (உஉ)

கோலமாராடகத்தாற்றுயின்றபாலிகைநிரைத்துச்
சீலமார்யாகசாலைத்திசைக்கவைச்செழுந்தீயோம்பி
மூலமந்திரத்தான்மிக்கசெபம்பலமுனிவர்செய்தார்
ஆலமார்கண்டன்றொண்டரரகரவெனத்துதித்தார். (உங)

வானவர்முனிவர்சூழவண்மைசேர்வீதிதோறுங்
கானதுந்துமிமுழங்கக்கன்னியர்கவரிவீசத்
தேனிறைமலரின்மாரிபொழிந்திடத்தேவியோடும்
மூனிறைவிமானமேறிப்புனிதனார்பவனிபோந்தார். (உச)

சுருண்டபூங்குழன்மின்னார்கயேநற்கீதம்பாடப்
புரண்டிடுதரங்கவாழிபோன்முரசொலிகள்போர்ப்ப
விரண்டெனும்விழாவிற்சோமமண்டலத்தினிதினேறித்
திரண்டநற்றொண்டர்சூழத்திருநகர்வலம்வந்தாரே. (உரு)

வருமதிநிகரவேவெண்சத்திரவகைநிழற்றப்
பெருமைசேராலவட்டம்பற்பலபிறங்கிச்சூழ
முருகலர்தொடையணிந்துமூன்றுநாட்கதிர்கால்செம்பொற்
பரிதிமண்டலத்தினேறிப்பரமனார்பவனிபோந்தார். (உசா)

மாதவர்மாந்தர்வானோர்மற்றுளோர்நெருங்கிச்சூழக்
கீதபல்லியமுழங்கக்கிளரொளியெயிறதுக்கும்
பூதவாகனத்தினேறிப்பொற்கொடியுமையாளோடுஞ்
சோதிநன்னாலர்நாளிற்றொன்னகர்வலம்வந்தாரே. (உஎ)

கற்றைவார்சடையெம்மண்ணல்கருதுமெய்யன்பரெல்லா
முற்றிடுமுழுவலன்பாற்கண்டுபோற்றிடவுவந்தே

வெற்றிமால்விடைமீதேறிவிண்ணவர்குழாங்கள்சூழ
மற்றையைந்தாம்விழாவின்வளநகர்வலம்வந்தாரே. (உஅ)

மதமுடைப்புழைக்கைமின்னிவயங்குபொன்னோடைநெற்றிக்
கதமிகுகுஞ்சரத்திலேறியேககனவாணர் • [
துதிபுரிந்திறைஞ்சவாறுந்திருநாளிற்றலங்குபாதி
மதிநுதலுமையாண்மைந்தர்தம்மொடும்பவனிவந்தார்.(உகூ)

சிந்தையின்மகிழ்ச்சிகூர்ந்துசெழுங்கதிர்மணியாற்பொன்னா
லிந்திரனமைத்தளித்தவெழின்மணிவிமானத்தேறிச்
சுந்தரத்தோகையோடுஞ்சுதரொடுமேழாநாளிற்
கந்தமார்மலர்புனைந்துகடிநகர்சூழ்ந்தாரன்றே. (௩௦)

அட்டமாசித்திபெற்றவருந்தவரமரர்போற்ற
எட்டெனுந்திருவிழாவிலிராவணனிடந்தெடுத்த
கட்டழகானவெள்ளிக்கயிலைவாகனத்திலேறி
மட்டுறுவிரைசேர்கொன்றைமாலையார்பவனிவந்தார். (௩௧)

மாமேருநிகரச்செய்தவச்சிரத்திருத்தேரேறி
நாமாதுகேள்வனுதிநாரணன்முனிவர்போற்றப்
பூமாரிவிண்ணோர்சிந்தப்புகழுமைமைந்தரோடுங்
காமாரியொன்பதாநாட்கவினுறப்பவனிபோந்தார். (௩௨

கற்றைவார்சடையார்தேரிலேறியேகவினார்வீதி
யுற்றுலாக்கொள்ளும்வேலையுடன்காலினாற்சூழ்ந்தேகும்
பற்றுளாரோரடிக்கோர்பரிமகஞ்செய்தபேற்றைப்
பெற்றிடுவார்கள்பின்னர்ச்சிவகதிபெறுகுவாரால். (௩௩)

நீற்றினான்பொற்றேர்ப்பின்னர்நியமமாய்ச்செல்கின்றோர்க்குக் •
காற்றணைந்திடச்சாந்தாற்றிகவிகைசெம்பொன்னளித்தோர்
நாற்றெருத்தனிலுந்தண்ணீர்ப்பந்தர்கணயந்துவைத்தோர்
கூற்றிணையுதைத்தான்மேவுஞ்சிவலோகங்குறுகுவாரால். ()

அன்னநற்றினத்திற்சைவரானவர்க்கன்பினோடு
நன்மைசேர்மகேசபூசைநயந்துநல்லன்பாற்செய்வோர்
பண்ணுமாமறையவர்க்குப்பரிவுடனனங்கொடுப்போர்
மன்னுசீர்வெள்ளிக்குன்றின்மகிழ்ந்தினிதிருப்பர்மாதோ. ()

அவ்விரவினிற்றிருத்தேரதனினின்றிறங்கியீசர்
திவ்வியவிமானமேறித்தேனுநெய்த்தீபமோங்க
மைவிழியுமையாண்மைந்தர்மன்னுசண்டேசரோடுஞ்
செவ்வியமணிபுனைந்ததிருக்கோயிலூடுசேர்ந்தார். (நிசு)

அற்றைநாள்விடியற்போதிலமலமாமன்றுளாடும்
புற்றராவணிநடேசப்புனிதர்பல்லியங்களார்ப்பப்
பொற்றிருக்கோயினின்றும்போந்தெழிற்சாந்துசாத்தி
நற்சுடர்தெரிசித்தோங்குஞ்சினகரநண்ணினாரால். (நிஎ)

பத்தெனுந்திருநாடன்னிற்பரிமர்வெள்விடைமேற்போந்து
பத்தர்முன்னூலுணர்ந்தபனவர்பண்ணவர்களேத்த
முத்தெறிதிரையார்சங்கமுகதீர்த்தங்கொடுத்துவந்து
வித்தகத்துவசந்தன்னைவிதிமுறையிறக்கிவைத்தார். (நிஅ)

மேடமாமதிமுன்னாகவிளங்கிழைவாமத்தோருக்
காடகச்சிலையினருக்கமர்ந்தமாபூசையாற்றி
நாடொறுந்திருநாடன்னைநடத்திநல்லருள்பெற்றுய்ந்தான்
கோடுநான்குடையவேழக்கொற்றவானவர்கோன்மாதோ. ()

முற்றிற்று.

---

## சருக்க சங்கிரகம்.

---

இந்திரன், தேவதச்சனைக்கொண்டு சாயாவனநாதர்க்குத்திருக்கோயில்கட்டுவித்து, ஆதிசைவர்களால் சிவாகமவிதிதவறாமல் ஆறுகாலம் பூசைசெய்வித்து, குருவாகிய வியாழபகவானிடத்து வேறோர் சிவலிங்கமூர்த்திபெற்று, ஆன்மார்த்தபூசைசெய்துகொண்டு, பொன்னுலகத்தையடைந்து வாழ்ந்திருந்தான். பின்பு இந்திரன், சிவபெருமான் சொல்லியருளிய திருவாக்கைநினைந்து, திருவெண்காட்டையடைந்து, சுவேதவனநாதர்க்கு மாசிமாதத்திற்றிருவிழாச்செய்து, அங்குநின்றும் சாயாவனத்திற்குவந்து, சாயாவனநாதர்க்குப், பங்குனிமாதத்தில் பூர்வபக்கஷஷ்டியும் கார்த்திகைநக்ஷத்திரமுங் கூடிய சுபதினத்தில் இடபக்கொடியை யேற்றினன். சாயாவனநாதர், இரண்டாந்திருநாள் சோமமண்டலத்திலும், மூன்றாந்திருநாள் சூரியமண்டல

த்திலும், நான்காந்திருநாள் பூதவாகனத்திலும், ஐந்தாந்திருநாள் இடபவாகனத்திலும், ஆறாந்திருநாள் யானைவாகனத்திலும், ஏழாந்திருநாள் இந்திரவிமானத்திலும், எட்டாந்திருநாள் கைலாசவாகனத்திலும், ஒன்பதாந்திருநாள் திருத்தேரிலும் எழுந்தருளிப்பவனிவந்தருளினார். ஒன்பதாந்திருநாளிராத்திரி விடியற்காலத்தில் நடேசப்பெருமான் எழுந்தருளித் திருச்சாந்துசாத்தி, தீபதெரிசனஞ்செய்துகொண்டு திருக்கோயிற்கெழுந்தருளினார். பத்தாந்திருநாள் சாயாவனநாதர் இடபவாகனத்தின்மீதெழுந்தருளிச் சங்கமுகதீர்த்தங்கொடுத்துவந்து கொடியிறக்கிவைத்தார். பின், சித்திரைமாதமுதலாக இந்திரன் சாயாவனநாதர்க்கு மகாபூசை செய்வித்து, நித்தியோற்சவம் நடத்தித்திருவருள்பெற்றுவாழ்ந்தான்,

---

## இயற்பகையார்சருக்கம்.

போதமாமுனிவர்சூதன்பொன்னடிவணங்கிப்போற்றி
வேதமாமுதல்வற்கன்பின்மிகுமியற்பகையார்காதை
நீதமாமுனிவசொல்வாயெனமிகுநேயத்தோடு
சூதமாமுனிவன்சாயாவனத்தர்தாடொழுதுசொல்வான். (க)

மணிகொழித்தெறியும்வேலைவண்புகார்நகரின்மேய
வணிகர்தங்குலத்துவந்தார்மாதொருபாகர்க்கன்ப
ரொணியெதுவிரும்பினாலுமிலையெனாதளித்துநாளும்
பணியணிவேணிச்சாயாவனத்தர்தாள்பணியுநீரார். (உ)

பூமலர்க்கணைவேளன்னார்பொருளினாற்றனதனைப்பார்
நாமநீருலகம்போற்றுமியற்பகைநாமம்பூண்டார்
காமருவடமீன்போற்றுங்கற்பினுக்கரசியென்னு
மாமனைக்கிழத்தியோடுமனையறம்புரிந்துவாழ்நாள். (ங)

தண்மதிமிலைந்தசாய்க்காட்டீசர்தம்மடியார்தம்மை
யுண்மகிழன்பிற்போற்றிவேண்டுவவுதவுநாய்கர்
வண்மைசேர்சீர்த்தியிந்தமண்ணுளோர்நனிகண்டுய்யப்
பெண்மகிழ்பாகநீத்தெம்பிரானொருவடிவங்கொள்வார். (ச)

வெண்டுகில்கொய்தகச்சம்விளங்கப்பின்செருகிப்பொன்செய்
யொண்டுகிலுத்தரீயந்தோள்கிடந்துலாவப்போக்கிக்
கொண்டுபொன்குயிற்றுங்கண்டிகண்டத்துக்குலாவப்பூட்டி
வெண்டிருநீறுசாந்தமட்டிவேத்திரங்கைதாங்கி. (௫)

வரையினிலருவிபோனமார்பில்வெண்ணூலிலங்க
விரையவிழ்மலர்செய்மாலைதுஞ்சிமேல்விளங்கவேத
வுரையெனச்சீதம்பாடித்தூர்த்தவேதியராபோதக்
கரைமலிபுகாரினைப்கர்கடிமறுகணுகிச்சார்ந்தார். (௬)

கண்ணுதலடியார்தம்மைக்கனவிலுமறுமலனீரே
ரெண்ணியதொண்டியற்றுமியற்பகைவணிகர்கோமான்
நண்ணுபொன்மணிமாடத்தினையகன்புகுதலோடு
துண்ணெனவெழுந்துபோற்றித்தொழுதுபொற்பீடத்தேற்றி ()

நிலமகழ்ந்தேனமாகிநெடியவன்றருவிக்காணா
நலமிகுதிருத்தாண்மீதுநறுமலர்கொடுபூசித்து
வலமதுபுரிந்தியான்செய்தமாதவவடிவாயீண்டென்
குலமுழுதாளவந்தகோலமேபோற்றியென்று. (௮)

நின்றிடுவணிகர்தம்மைநேயமாய்வஞ்சவேட
மொன்றியபெருமானோக்கியொருப்படுமன்பினோடு
குன்றவிற்கோமானன்பர்வேண்டுவகொடுத்திரென்னு
மென்றுறுபுகழ்கேட்டும்பாணுமொன்றுநயந்துவந்தோம், (௯)

கொடுக்கலாமென்னில்யாமுங்கூறலாமென்றேவெள்ளி
யடுக்கலானுரைத்தகாலையடிபணிந்தடிகாண்முந்நீ
ருடுக்கலாம்புவியிலெற்கென்றுளவெலாமன்யர்வேண்டிற்
றடுக்கலாமென்பதுண்டோவேண்டுவதருவலென்றார். (௧௦)

எனவிவரியம்புமாற்றங்கேட்டியற்பகைநுங்காதன்
மனைவியைத்தருவீரென்றுகேட்டலுமனமகிழ்ந்தே
முனமுறுதவத்தாலென்பாலுளபொருண்முன்னிக்கேட்டீர்
புனவரேயென்போல்யாரேபாக்கியம்பெற்றாரென்று (௧௧)

கதுமெனவிரைந்துள்புக்குக்கற்பினுக்கரசியென்னு
'மதுமலர்க்குழலினாளைமணக்குலமடந்தைசெண்மோ"

விதிமுறைப்பெருமானன்பர்க்குனையின்றவிருப்பினீங்கே
னிதுவுணர்குதியெனுமுன்கலங்கிப்பின்றெளிந்திசைப்பார். (௧௨)

அன்பர்நீர்பணித்ததிங்கின்றிதுவெனிலதற்குமாறு
மென்பணியுளகொலோவென்றிசைந்தியற்பகையார்தாளின்
முன்பணிந்தெழாமுன்றொண்டர்முடிகவிழ்த்தெதிர்வணங்க
பின்பெயர்ந்தெனப்போய்வஞ்சவேதியர்ப்பணிந்துநின்றார். (௧௩)

மனைவியையளித்ததொண்டர்வந்துவேதியனைத்தாழ்உ
வெனையினிம்பணித்தலென்னேயென்றிடவஞ்சவேடர்
னைகடற்புகாருஞ்சேணுங்கடந்தெனைவிடுத்தியின்று
வனைகுழற்றோகையென்னவணிகரும்பிணங்கிச்சொல்வார். (௧௪)

வேறு.

முன்னையானேசெய்குதலன்றோமுறையாமீ
தென்னேயென்னேதாழ்த்தேன்வாளாவிதுகாறு
மின்னேவந்தேனென்றேவேறோரிடமெய்தி
யொன்றாஞ்சக்கச்சிடையிட்டிடைவாளேந்தி, (௧௫)

வந்தடிபோற்றிக்கைதவமுறுந்தவமறையோனை
முந்தெழின்மாதொடுபோகவிடுத்துமுனைப்போரிற்
சிந்துவல்யாவர்தடுக்கினுமென்றுசினத்தோடுந்
தந்திணிதோடுணையாகநடந்தனர்தனிவீரர். (௧௬)

மாதுநல்லோரும்வள்ளறன்கேளிரும்வந்தொன்றாய்ப்
பேதையொர்பார்ப்பான்பின்செலவிட்டுப்பின்போகு
மீதுமுன்செய்தாராரியற்பகைதானிதுசெய்தான்
றீதவன்மட்டோநங்குடிக்கென்றுந்தீதன்றோ (௧௭)

பித்தனவன்செய்தானெனிலிந்தப்பெருஞால
மொந்திடுமோபழிமீட்குதுமென்றொளிர்வாள்வில்லும்
முத்தலைவேலுங்கொண்டுபுரண்டெழுமுந்நீரின்
குத்தெறிவெட்டுடென்றார்ப்புறம்யாருங்குறுகுற்றார் (௧௮)

மான்முதலாந்தேவர்க்கும்வழித்துணையாம்வள்ள
றன்றுணையாக்கொண்டிடுமடியார்பின்சூழ்ந்தெய்த
தேன்றுளிகஞ்சத்திருவனையாரொடுசிலபேசி
வான்றுதிசெய்யப்போமதுகண்டுவளைத்திட்டார். (௧௯)

ஏடார்பார்ப்பானென்செய்தாயெங்குலமாதை
நாடார்காணக்கொண்டுநடந்தாய்நவையில்லாப்
பீடார்வேதகுலத்தாய்நீயிப்பிழைசெய்தாற்
கோடார்யாரெங்கெய்துதியென்றெதிர்கூடுற்றார். (௨0)

பித்துட்பட்டவியற்பகைதன்னைப்பெரிதும்நீ
எத்திறிவட்கொண்டேகுவையேல்யாமேதுக்கு
வைத்துயிர்வாழ்வதுமாதைவிடுத்திடமாட்டாயே
லித்தரையின்முடிவின்றென்றாரெம்பெருமானார். (௨க)

அச்சுற்றார்போன்மறைவடிவார்தம்மருகெய்துங்
கச்சுப்பூண்முலையாண்முகநோக்கக்கண்டெய்த்தீர்
* கிச்சுட்பட்டிடுதுய்யிலியற்பகைகேளோரை
நச்சுக்கூர்வாள்கொண்டடுமென்றார்நவையில்லார். (௨௨)

என்றிடுமாற்றங்கேளாமுன்னிடியேறன்னார்
கொன்றிடுவேன்றடைசெய்குநரைத்துயர்கொள்ளாதிர
நின்றிடுமென்றவணிறையுறவோர்தமைநேருற்றே
சென்றிடுமின்னுயிர்போமுனமென்றார்சிவநேசர். (௨௩

ஈதவர்சொல்லக்கேட்டவர்யாவருமென்சொன்னாய்
பாதகமெண்ணாய்ப்பழியோராயோர்பனவற்குன்
மாதையளித்தாய்வழிவிடவந்தாய்மதியில்லாப்
பேதையரிற்பேதாய்பெருமிதமொழிபேசுறுவாய். (௨௪)

அந்தணனுக்கினையிரந்தனனேற்பொருளாதந்து
செந்தழன்முன்னோர்மாதைமணந்திடச்செய்யாதே
யுந்தனருங்குலமனையையிரந்தார்க்குதவென்றே
யெந்தநன்மாமறைகூறியதாகுமியம்பென்றார். (௨௫)

இப்படியொக்கலியம்புதல்கேட்டியற்பகையாரும்
மைப்புரைகண்டத்தானடியாரெம்பான்மன்னி
யெப்பொழுதேதுவிரும்பினுமீகுவனிலையென்றே
செப்புவதின்றவர்தன்மையுணர்ந்திலிர்சிறிதென்றார். (௨௬)

பூதிபுனைந்தரனுமையின்றுகண்மணிபூண்டு
மாதியைபாகத்திறையடிபேணுமதியோர்கள்

* கிச்சு—நெருப்பு.

சாதியினற்சிவமாகுவர்செய்தொழிற்றனெல்லா
மாதியரன்செய்திருதொழிலாமென்றறிவீரால். (உஎ)

சிவனடியார்பணிசெய்குவதேநற்றவமாகுஞ்
சிவனடியார்பூசனையேசிவபூசனையாகுஞ்
சிவனடியார்குறையும்மிடமேசிவனுலகாகுஞ்
சிவனடியார்க்கொன்றீகுவதேசெவ்வறமாகும். (உஅ)

ஈசற்கோர்பிழைசெய்யினுமுய்குவரீசன்றன்
னேசர்க்கோர்பிழைசெய்பவருய்கிலர்நெடுவானிற்
றேசுற்றிடுகதிர்முன்னிற்பினுமத்திகழ்தேசால்
வீசுற்றிடுகதிர்படுமணினின்றிடன்மேவாதால். (உகூ)

அடியார்க்கெளியன்மதியணிவேணியனுமென்றற்
படிமீதவர்புகழ்சொல்குநர்யாரிப்பரிசாலென்
கொடுநேரிடையாடனையவர்வேண்டக்கொடுத்தேனீர்
கடிதவ்விவளொடுமொன்றிலைசெல்குதிர்கடிதென்றார். (௩௦)

என்செய்வாமிவனெம்முரைகேளானென்றெக்கல்
மின்செய்யொல்கிடையாண்முகநோக்கநுமிகநொந்து
பொன்செய்நங்குலமுழுவதுநீள்பழிபூணுதே
வன்செய்கைப்பனவன்பின்போகேல்வருகென்றார். (௩க)

வேறு.

ஒக்கலீதுரைப்பக்கேட்டேபொன்றொடியுணர்வாலயார்க்கு
மிக்கநிருரைகநவீதோவிளங்கிழையவர்கள்போற்றத்
தக்கதோர்தெய்வங்கொணகர்தலையலாதுண்டோவன்றோ
சொற்கடவாமையன்றேகற்பெனச்சொல்வர்தூயோர். (௩௨)

கணவர்சொற்பேணியன்றேவொருத்திகல்லாகநின்றாள்
கணவர்சொற்பேணியன்றேகாலனையொருத்திவென்றாள்
கணவர்சொற்பேணியன்றேகதிரெழாதொருத்திசெய்தாள்
கணவர்சொற்பேணியன்றேயொருத்திகொங்கணனைவென்றாள்.

கடிமனைவிளக்கலென்பசரிகைதன்கணவருண்ணும்
படியறுசுவைகளூட்டல்கிரிகைதன்பதியோடொன்றி
யொடிவிலாவின்பந்துய்த்தல்யோகமாமுறையினிற்ற
றடியிடையார்கட்கெல்லாஞானமென்றுரைப்பர்தொல்லோர்.

ஆதலிற்கொண்கர்வார்த்தையருமறையெனக்கொண்டிந்த
மாதவர்பின்யான்செல்வேன்மனையிடைத்திரும்பிவாரேன்
போதலேதகுதிநீவிரென்றனர்புகழ்வசிட்டன்
காதல்சேர்பன்னியன்னகற்பினுக்கரசியாளுர். (௩௫)

இன்னணமிருவர்கூறும்வார்த்தைகேட்டுற்றோர்யாரு
நன்னயமொழியாலொன்றுநடைபெறுதென்னும்வேலை
யன்னமென்னடையாரோடுமெம்பிரானகலக்கட்டோர்
சொன்னசொன்மறுத்துச்செல்லத்துணிதிரோவேனமறுத்தார

மறுத்ததுகண்டுவெள்ளல்வயப்புலிபோத்தெனப்போய்க்
கறுத்துடைவாளையேந்திக்கால்பலவகையான்மாறித்
துறுத்துநாத்தலைகள்வீழத்துடிதுடித்துடல்கள்சாய
வறுத்தெறிந்தறைகூயஞ்சாதமர்விளையாட்டயர்ந்தார் (௩௭)

விழுந்தனதலைகளெங்கும்விரிந்தனகுடர்களெங்கு
மெழுந்தனகுருதியெங்குமெரிந்தனகண்களெங்கு
மழுந்தினகுருதியாற்றினவயவக்கலன்களெங்கு
முழுந்துருண்முன்னரீதுபுரிந்தனருவமையில்லார. (௩௮)

எண்ணிலராகிவந்தேயெதிர்ந்துளார்தம்மையெல்லாம்
விண்ணுளாராகப்போக்கித்திரிந்திடும்வீரர்வேதப
பண்ணுளார்தம்மைநோக்கிப்பயப்படாதடியேன்முன்னர்
நண்ணுமிக்கான்கடந்துவிடுக்குவனடக்கவென்றா. (௩௯)

மாதுடன்வஞ்சவேடமருவினர்முன்போகப்பின்
ஏதமிலடியார்செல்லவிறைவர்சாய்க்காட்டின்மாடே
போதலுந்தொண்டர்தம்மைப்புகழ்ந்துநீர்மீள்வீரென்ன
வாதரத்தொடுதாழ்ந்தேத்தியரசர்பின்னவருமீண்டார். (௪௰)

செயற்கருஞ்செய்கைசெய்ததிருத்தொண்டர்மீண்டுபோகப
புயற்கருங்களத்தானேக்கிப்புண்ணியவணிகச்செல்வ
னயர்ப்பிலானபாக்கனில்லானகல்கின்றனென்றேயன்பார்
இயற்பகையாரைமீளவெம்பிரானழைக்கலுற்றார். (௪௧)

புண்ணியவடிவவோலம்போகலைவருதியோல
மெண்ணுதற்கரியசெய்தவியற்பகைமுனிவவோலங்

கண்ணுதற்கன்பவோலமென்றனன்கரியோன்கஞ்சப்
பண்ணவன்மறையோலிட்டுப்பற்றுதற்கரியனானான். (௪௨)

அவ்வுரைசெவியிற்கேளாவடியனேன்வந்தேன்வந்தேன்
றெவ்வர்களுளரேலின்னுஞ்சேணிடையேற்றுகின்றேன்
இவ்வுரையுண்மையென்றேயியற்பகையெய்தும்போதி
னவ்விடைமறைந்தெம்பெம்மானும்பரிற்கோலங்கொள்வான். ()

வந்தவர்மறையோர்தம்மைக்கண்டிலர்மாதைக்கண்டார்
செந்துகிற்றன்றிற்றுவுஞ்செழும்பசுங்கொடியையேய்ப்பக்
கொந்தணிகுழற்கூவென்றபேதையாருடனேசாய்க்காட்
டெந்தையார்விடைமேல்வானிலெழுந்தருள்கோலங்கண்டார் ()

கண்டனர்தொழுதுவீழ்ந்தாரெழுந்தனர்களித்தவன்புட்
கொண்டனர்சிரமேற்செங்கைகுவித்தனர்கோலமாய
முண்டகத்தவிசோன்மாயோன்சதமகன்முதலாவுள்ள
வண்டர்கட்கரியோனாகுமமலனைத்துதிக்கலுற்றார். (௪௫)

தேவர்கடேவேபோற்றிதிரிபுரதகனாபோற்றி
கூவெனுங்கோதையாளோர்கூறுடைப்பரமபோற்றி
வாவெனக்கூறியென்னைவழித்தொண்டுகொண்டாய்போற்றி
தாவிலாப்புகழ்சேர்சாய்க்காட்டீசனேபோற்றிபோற்றி. (௪௬)

எனவிவர்போற்றுமெல்லையெம்பிரானடியார்தம்மை
நினையன்றியாவரிந்தநீணிலத்திதுபுரிந்தார்
மனமிகமகிழ்ந்தோமுன்றன்மணக்குலமடந்தையோடு
நனைமலர்த்தாரோய்நீயுநம்முடன்போதுகென்று. (௪௭)

அன்பொருவடிவமாயவடியவர்தமக்குந்தெய்வ
மன்பெருங்கற்புவாய்ந்தமனைவியார்தமக்குந்தக்க
தன்றிருவருளானீடுதனிப்பெரும்பேறளித்துப்
பொன்புனைதிருச்சாய்க்காட்டின்புனிதமார்தளியுட்புக்கார். (௪௮)

விண்ணவர்பூவின்மாரிபொழிந்திடவேதமார்ப்பப்
பண்ணவர்முனிவர்போற்றப்பண்புறுசிவலோகத்தி
னுண்ணிறையன்பர்கும்பிட்டுடனுறைபெருமைபெற்றார்
எண்ணருஞ்சுற்றத்தோரும்வானிடையின்பம்பெற்றார். (௪௯)

முற்றிற்று.

---

## சருக்கசங்கிரகம்.

காவிரிப்பூம்பட்டினத்திலே வைசியர் குலத்திலே இயற்பகைநாயனார் திருவவதாரஞ்செய்து; சாயாவனேசுரருடைய திருவடிகளில் இடையறாத அன்புடையவராய், பரம்பரையிற் றோன்றிய பெருஞ்செல்வத்தினராய், சிவனடியார்கள் வேண்டுவனவற்றைப் பேரன்போடுங் கொடுப்பவராய்க் கற்பினுக்கரசியாரென்னு மனைவியாரோடு இல்லறத்தைவழுவாது நடத்திவாழுநாளில், சாயாவனேசுரர், தம்மடியார் விரும்பிய பொருள்களை இயற்பகைநாயனார் இல்லையென்னாமல் கொடுக்குந் திருத்தொண்டை உலகத்திலுள்ளோர் யாவருங்கண்டுய்யுமாறு திருவுளத்தெண்ணி, வெள்ளியவஸ்திரத்தை யணிந்த இடையையுடையவராய், பீதாம்பரமணிந்த திருத்தோளினராய், உருத்திராக்கமாலையணிந்த கண்டத்தினராய், திருநீறுங் கலவைச்சாந்துஞ் சாத்தியதிருமேனியராய், பொற்பிரம்புதாங்கிய வலத்திருக்கரத்தினராய், வெண்புரிநூலணிந்த மார்பினராய், மணமாலையணிந்த குஞ்சியராய்த் தூர்த்தப்பிராமணத்திருமேனிகொண்டு இயற்பகைநாயனாருடைய "நவரத்னங்களால் அலங்கரிக்கப் பெற்றுத் தேசோமயமாய் விளங்குகின்ற,, திருமாளிகையினிடத்தே யெழுந்தருளுதலும், இயற்பகைநாயனார் எதிர்கொண்டழைத்துத் தொழுது பொற்பீடத்தேற்றி நறுமலர்கொண்டு திருவடிகளைப்பூசித்து பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து, அடியேன் முன்செய்த தவவடிவாய் என்குலமுழுதும் ஆண்டருள இங்கெழுந்தருளியவரே யென்று துதித்து நின்றமாத்திரத்தில், வஞ்ச வேடங்கொண்டருளிய பெருமான் அவரை நோக்கி இயற்பகையே! நீசிவபத்தர்கள் விரும்பியவற்றைக் கொடுக்கின்றாயென்னும் புகழ்கேட்டு, நாம் ஒருபொருளை விரும்பிவந்தோம் அப்பொருள் கொடுத்தற் கிசையுமாயின் யாமுங்கேட்கலாமென்றுசொல்லியருள, இயற்பகைநாயனார் வணங்கி சுவாமி அடியேன் பொருள்கள், சிவனடியார் விரும்புமிடத்துக் கொடுத்தற்குரியனவேயென்றுகூற, எம்பெருமான்கேட்டு இயற்பகையே! உன் காதல் மனைவியை விரும்பி வந்தோம், கொடுப்பாயாகவென்று சொல்லியருளலும், நாயனார் மனமகிழ்ந்து ஐயரே! அடி

யேன் முன்செய்த தவத்தால் என்னிடத்துள்ள பொருளையே கேட்டீர் கொடுத்தேன் என்றுகூறி, விரைவில் மனைவியாரிருக்கு மிடத்திற்போய், கற்பினுக்கரசியே! உன்னை இப்பொழுது இங் கெழுந்தருளியிருக்கின்ற சிவனடியார்க்குக் கொடுத்தேன் அவ ருடன் செல்வாயாக, வென்று சொன்னமாத்திரத்தில், கற்பினு க்கரசியார் கலங்கிப், பின்றெளிந்து, நாயகரே! உம்முடைய திரு வார்த்தைக்கெதிர்வார்த்தை யுண்டோ அடியேன் அவ்வாறே செய்கின்றேனென்று இயற்பகையார் திருவடிகளிலே நமஸ்கரி த்து எழுவதற்கு முன்னே இயற்பகையாரும், அவர் சிவனடியா ர்க்குரியராயினரென்று எதிரேவணங்க, கற்பினுக்கரசியார் வஞ் சவேதியர்பாற்சென்று வணங்கிநின்றார். அப்பொழுது நாய னார் வேதியரைவணங்கி, சுவாமி! இன்னும் யாதேனும்பணிவிடை யுண்டோவென்று கேட்க, வேதியர், அன்பனே! இவ்வூரையும் உன் சுற்றத்தாரையும் கடந்து நம்மையனுப்புவாயாகவென்று சொல்லியருள, நாயனார் ஐயரே யான் முன்னேதானே செய்ய வேண்டியபணிவிடையை இதுவரையிலும் தாழ்த்த குற்றத்தை ப் பொறுத்தருள்வீரென்று, யுத்தகோலங்கொண்டு வாளேந்தி வந்து, வேதியரை மனைவியாரோடும் முன்னே செல்லவிடுத்து, தாம் பின்செல்லும்போது கற்பினுக்கரசியாருடைய சுற்றத்தா ரும், நாயனார் சுற்றத்தாரும் ஒருங்குகூடி, இக்காரியம் உலகத் தில் யார்செய்தார் இயற்பகைதான்செய்தான். இதனாலுண்டா கும்பழியவன்மட்டோ? நம்குடிக்கு என்னான்றுந் தீராப்பழியா குமே இப்பழியை மீட்போமென்று யுத்தகோலத்தராய் வந்து, கற்பினுக்கரசியாரோடு செல்கின்ற எம்பெருமானாகிய வஞ்ச வேதியரை வளைந்துகொண்டு, ஏ அடாபார்ப்பானே! என்னகாரி யஞ்செய்தாய் எம் குலப்பெண்ணை நாட்டார் காணும்படிக்கொ ண்டு நடக்கின்றாய் வேதகுலத்துப் பிறந்த நீயே இப்பிழைசெய்தால் உலகத்தில் நெறிதப்பாதவர்யார்? போகா தேயென்று தடுத்தார்கள். அச்சமயத்தில் வேதியர் அஞ்சுவார் போல் கற்பினுக்கரசியாரை நோக்கியருள, கற்பினுக்கரசியார் சுவாமி! பயப்படாதீர் இவர்களை இயற்பகையார் வாளுக்கிரை யாக்குவாரென்றுகூற, இவ்வார்த்தையைக்கேட்பதற்கு முன்னே இயற்பகையார் சுவாமி பயப்படாதீர் தடைசெய்கின்றவர்களைத்

கால்கின்றேனென்றுகூறி, தடைசெய்யும் சுற்றத்தாரை யெதி ரந்து, நீங்கள் தடைசெய்யாமல் உயிர்பிழைத்துப்போங்களென் ர். சுற்றத்தார்கள், இயற்பகையே! என்னசொன்னாய்? பழிவருமெ ாறெண்ணாமல் இப்பிராமணர்க்கு மனைவியைக் கொடுத்தாய் ழிவிடவும்வந்தாய் அறிவில்லாதவனே மனைவியையழைத்துக் கொண்டு திரும்புவாயாகவென்றார்கள். அவ்வார்த்தையைக்கே ட்ட இயற்பகையார், சுற்றத்தார்களே நீங்கள் சிவனடியார்பெ ருமையைச் சிறிதும் அறியமாட்டீர்கள், யான் சிவனடியார்விரு ம்பும் பொருள்களை இல்லையென்னமற் கொடுத்தலையே விரத மாகஉடையேன் இப்பொழுதும் இச்சிவனடியார் விரும்பிக்கே ட்டலால் என் மனைவியைக்கொடுத்தேன். நீங்கள் தடைசெய்வ தறபயனில்லை, தடுப்பீர்களாயின் என்வாளுக்கிரையாவீர் என ர் சுற்றத்தார் இவன் நம்முடைய வார்த்தையைக்கேளான ம்என்செய்வோமென்று வருந்திப் பின்பு கற்பினுக்கரசியாரை நோக்கி அம்மா நம்குலமுழுதும் பெரும்பழியடையாவண்ண ம்வேதியன்பின்செல்லாமல் திரும்புவாயாகவென்றார்கள். அதனை க்கேட்ட கற்பினுக்கரசியார் அறிவான்மிக்கஉறனவினரே! நீர இவ்வாறுகூறுதல்தகுமோ பெண்களுக்குக் கணவரே தெய்வம் அவர் சொற்படி நடப்பதே கற்பு. கணவர் சொல்லைக்கேட்டு ஒருத்தி கல்லாகநின்றாள். கணவர் சொல்லைக் கேட்டு ஒருத்தி பமனை வென்றாள். கணவர் சொல்லைக் கேட்டு ஒருத்தி சூரியனு திக்காமற்செய்தாள். கணவர் சொல்லைக்கேட்டு ஒருத்தி கொங் கணரைவென்றாள். அன்றியும், பெண்களுக்கு வீட்டை விளக் குதல் சரியையென்றும், கணவர்க்குப் போசனம் ஊட்டுதல் கிரியை யென்றும், கணவரோடு இன்பமனுபவித்தல் யோகமெ ன்றும, அவர் சொற்படி நடத்தல் ஞானமென்றும் பெரியோர் சொல்வார்கள். ஆதலால் யான் என் கணவர் திருவார்த்தையின் படி இவ்வேதியர்பின் செல்வேன். இனித்திரும்பி மனையிடத்து வாரேன் நீர் திரும்பிப்போதலே தகுதி யென்றார். இவ்வாறு இருவர் வார்த்தையையும் கேட்டசுற்றத்தார் இனிநயவார்த்தை யால் ஒன்றும் நடவாது; தடைசெய்து கற்பினுக்கரசியாரை மீள்விப்பதே தகுதியென்றார். அச்சமயத்தில் வேதியர் கற்பி னுக்கரசியாரோடும் நடந்தருளினார். சுற்றத்தார் வேதியனே!

எங்களை சொல்லைமறுத்துப்போகாதேயென்று, ஆயுதபாணியராய்த் தடுத்தார்கள். அதுகண்ட நாயனார் கோபங்கொண்டு வாளையே ந்திச்சென்று சாரிமாறிப்போர் செய்து சுற்றத்தாருடைய தலைக ளையறுத்து வீழ்த்திக்கொன்றுவிட்டு வேதியரை வணங்கி, சுவா மி! யடியேனுக்கு முன்னரே நடந்தருள்வீர். இக்காட்டைக்கடந் துவிடுப்பேன் என்றார் வேதியர் கற்பினுக்கரசியாரோடு முன்னும் நாயனார் பின்னுமாக நடக்கும்போது திருச்சாய்க்காட்டிற்குச்ச மீபத்திற்செல்லும் சமயத்தில், வேதியர் நாயனாரைப்பார்த்து, திரும்பிச்செல்வாயென்றார். நாயனார் வணங்கித் துதித்து மீண்டு சிலதூரஞ் செல்லும்போது, அம்பெருமான் இயற்பகையாரை மீளவும் அழைக்கத்தொடங்கி, "புண்ணியவடிவனே யோலம், போகாமல் வருவாய் ஓலம், பிறரால் எண்ணுதற்கும் அரிய செய் கையைச் செய்த இயற்பகை முனிவனே யோலம், சிவபிரார்க் கனபனே யோலம்" என்றார். நாயனார் அத்திருவார்த்தையைக் கேட்டு, சுவாமி! அடியேன் வந்தேன், வந்தேன், இன்னும் பகை வாசருண்டாயின் கொல்கின்றேன் என்று சொல்லிக்கொண்டு மிகுந்த விரைவோடு சென்றபோது, எம்பெருமான் வஞ்சவேதி யவேடமறைந்து ஆகாயத்திற் திருக்கோலங்கொள்வாராயினர். வந்த நாயனார் மனைவியாரை மாத்திரம் கண்டு, தம்பால்யாசித்த வேதியரைக்காணாமல் வருந்தும்போது (சாயாவனேஸ்வரர்கூவெ னறகோதைநாயம்மையாரோடும் இடபவாகனத்தின்மேல் ஆகாயத் தில்எழுந்தருளிய திருக்கோலத்தைக்) கண்டு, பேரன்புடனே நமஸ்கரித்துத்தோத்திரஞ்செய்தார். சாயாவனேசுவரர் இயற் பகைநாயனாரை நோக்கி, "அன்பனே! நீ செய்த திருத்தொண்டி ற்கு மிகமகிழ்ந்தோம், நீயுன் மனைவியோடும் நம்முலகத்திற்கு வருவாயாக" வென்று சொல்லித்திருச்சாய்க்காட்டுத்திருக்கோ யிலுட் புகுந்தருளினார். இயற்பகைநாயனார் தம்மனைவியாரோ டுஞ்சிவலோகத்தை யடைந்து சிவபெருமானைக்கும்பிட்டு உடனு றையும் பெரும்பேற்றைப்பெற்றார், அவர் சுற்றத்தாரும் வானுல கின்பத்தைப்பெற்றார்கள்

முற்றிற்று.

## சங்கமுகதீர்த்தச்சருக்கம்.

சீருற்றோங்கிடும் புனித சங்கமுகதீர்த்தத்தின் சிறப்பியாவு நீருற்றோங்கிடுஞ்செய்யநீள்வேணி நிமலதிருபாதப்போதி, ஞருற் றோங்கிடுமனத்துமுனிவீர்காள் யானெடுத்துநவிலற்பாற்றோ, வே ருற்றோங்கிடு மந்தத்தீர்த்தத்தினியல்பொர் சிறிதிசைப்பக்கேண் மின். (௧)

தானமொடுதவமென்னு மிரண்டினையுந் தரணியுள்ளோர் புரிந்துவாழ, வானளவுஞ்சையமெனும்வரைநின்றோவாதென்றும்வரு காவேரி, மானதி நல்வண்மைபெறும்புகார்நகரிலரனருளான் மருவிக்கிழ்பா, லானகடற்புகுதுமிடஞ் சங்கமுகதீர்த்தமென வறைவாமர்தோ. (௨)

வேறு

ஆதியிலொருகற்பத்திலசலையிலுயிர்கள்யாவும்
பாதகமென்னுந்தீயபங்கமீதழுந்திமேவப்
பூதலமாதுபாரம்பொறுதுபுண்டரிகப்போதின்
மீதுறுவான்முன்கூற விதியுமாதவன்பாலுற்றே. (௩)

உரைத்தனன்கேட்டமாபோனுழிதேரூழியோங்கும்
வரைக்கயிலாயமுற்றேவள்ளலாரருள்சேர்செம்பொன்
மரைத்திருத்தாளைமுன்னிவருடமாயிரநோன்பாற்ற
நரைத்திருவிடைமேற்றோன்றிநம்பனுங்காட்சிநல்கி. (௪)

நத்துறுகரத்தாய்வேண்டும்வரமெவனவில்வாயென்ன
வித்தகபுவியோர்பாவம்விலகுமாறருள்வாயென்றே
யத்திருமாயோன்வேண்டவாழிவாய்வருநஞ்சுண்ட
வுத்தமக்கருணையாளனுந்திபூத்தோனைநோக்கி, (௫)

வேதவாகமபுராணமிருதியேமுதலயாவும்
பூதரவடிவமாகப்பொருந்தியுள்ளனவவற்றைச்
சீதிமார்புனலதாகச்செய்குதுமந்நீர்மூழ்கின்
மேதினியுயிர்கள்பாவம்விடுத்தருங்கதியிற்சேரும். (௬)

எனமொழிந்தவற்றையெல்லாமினியநீர்வடிவமாக
வுனலுமங்கவைகள்யாவுமோங்குபுண்ணியநீராகிக

கன்மிகுந்திரைகள்வீசிக்கணக்கில்யோசனையெல்லைத்தாய்
முனமுறுந்தன்மைகண்டுமூவர்க்குமுதலாமூர்த்தி. (எ)

சூக்குமவடிவமாகப்புரிந்தனன்றாயவந்நீர்
பூக்கமழ்குழன்மாதாகிப்பொற்புறுகயிலாயத்துந்
காக்குமால்வைகுந்தத்துங்கடிகமழ்கமலப்போதின்
மேக்குறுசதுர்முகத்தோன்மேவுசத்தியலோகத்தும். (அ)

சஞ்சரித்திடுதினத்தோர்தினத்தினிற்றமிழுணர்ந்தோன்
மஞ்சுசூழ்பொதியமேவுமாதவத்தோர்தங்கோமான்
கஞ்சனதார்புக்கந்தக்காரிகைதன்னைக்கண்டு
விஞ்சியகாதல்கூர்ந்துவேட்குமாறுள்ளஞ்செய்தான். (கூ)

ஆங்கதுகண்டவேதாவத்தமிழ்முனியைநோக்கி
யீங்கிவளைக்கடத்திலெடுத்தேகென்றியம்பவந்தப்
பூங்குழறனைக்கும்பத்திறபொற்புறக்கொண்டுமீண்டே
பொங்குறுசையவெற்பினும்பரக்கடத்தைவைத்தான். (க0)

அம்மலையின்முற்காலத்தருந்தவமுனிவர்பல்லோர்
செம்மைசேர்பலாசமொன்றிற்சேர்ந்திருந்தனர்களாகக்
கம்மகவான்வேள்விக்காக்கடிந்தனன்கருதியத்தை
யம்முனிவரர்சினந்தேயரிக்கரமொழிகவென்றார். (கக)

சாபமேயிடுதல்கண்டுதண்புனன்மருதக்கோமான்
கோபமிக்கையர்காணீர்குற்றமொன்றிலாதவென்னைப்
பாபமிக்குளன்போலெண்ணிப்பகர்ந்தனிர்சாபநீவிர்
தாபமிக்கிவ்வரைக்கட்டண்டமாய்முளைத்திரென்றான். (கஉ)

என்றவிந்திரனைநோக்கியிருந்தவமுனிவர்யாரும்
நின்றசீர்க்கோவேநூறுநெடியமாயாகஞ்செய்தோ
யினறெமக்கிசைத்தசாபமெம்மைவிட்டென்றுநீங்கு
நன்றுரைசெய்வாயென்னநாகர்கோனவிலலுற்றான். (கங)

மலயமாதவன்கையேந்தும்வளமிகுகரகநீரா
லலகினேன்பினிர்றஞ்சாபமகன்றிடுமெனாமன்னோர்
பலகிளைவடிவங்கொண்டப்பருப்பதவரைப்பினீடி
யிலகுறநின்றார்முன்னமியம்புமக்கடத்தின்மீது. (கச)

கருமைசேர்காகமேறக்கண்டனன்கடத்தின்வந்த
திருமுனிபோபோவென்றுசெப்பலுங்கைவமாற்றம்
பெருந்திதனக்கென்றெண்ணிப்பின்னுகனருவினாலே
பொருபெருங்கடத்தினின்றுமொல்லையிற்பரந்தோடிற்றால். (௧௫)

அந்தநற்புனிதநீர்பாய்ந்திடுதலுமயர்ந்தோமான்
ந்தநேதார்சாபநீங்கித்தவமிகுமுனிவர்யாரும்
க்கதையவடிவமெய்திமுழங்குமப்புனிதநீர்தோய்ந்
ந்தமிலிறைவற்பூசித்தரும்பெறல்வீடுசேர்ந்தார். (௧௬)

வகமிக்கநீர்செல்லும்வேலையிற்சீவேரனோன்பிற
ாகவோர்மகளாய்க்காவேரிபெயரடைந்தபின்னர்
ாகரும்விரும்புசெல்வமருவுபூம்புகாரினூற்றச்
ாகரமென்னுங்கேள்வன்றனைமுணம்புணர்ந்ததன்றே. (௧௭)

வேறு.

அன்னயகாவிரிபுகுமலைகடற்றுறை
தன்னினினைந்தோர்களுந்தமதுள்ளத்திடை
நினைவனயாவையுமெய்தினீவிரு
வினையையும்வென்றரனடியின்மேவுவார். (௧௮)

வேறு

பொன்னிநீர்கடலிற்செல்லும்புனிதசங்கமத்தின்மூழ்கி
ன்னிதியாடைபொற்பூணறுபகாயரிசியாதி
பன்னிருபனவர்க்கீந்தோர்பன்னிருபிறப்பிலீட்டிய
துன்னியபவங்கள்போக்கித்தூயவானடைவர்மாதோ. (௧௯)

அப்புனற்றீர்த்தன்னிலயன்முகத்துதித்தோரான
வொப்பருமறையோர்க்கேமமுதவினர்விதியூர்சேர்வர்
முப்புரம்பொடித்தநாதன்முகத்தினுற்பவித்தசைவ
விப்பிரர்க்கேமமீந்தோர்வெள்ளிமால்வரையிற்சேர்வர். (௨௦)

அந்தநற்புனிததீர்த்தத்தாடித்தென்புலத்தினோர்க்குச்
சிந்தையிலன்புகூர்ந்துதிலதருப்பணஞ்செய்வாரேல்
எந்தையார்சாய்க்காட்டீசரெள்ளொன்றுக்கயுதமாண்டாய்
நந்திடாதவரைவானநாட்டினையாளவைப்பார். (௨௧)

அப்புனற்புனிததீர்த்தமிர்மதியணிந்தோன்றன்னை
யொப்புயர்வில்லாதானை யொண்மலர்கொடுபூசித்தோர்
அப்புறம்வேணிபாலச்சுடர்விழிதோனுன்கிநதா
ரப்புறுவேணிபெற்றேயரன்றிருக்கயிலைசார்வார். (உஉ)

அகத்தியமுனிசினங்கொண்டாழியுண்குவலெல்லாந்தேமுச்
சகத்தினர்தொழுமாயூரஞ்சாரநதருள் வள்ளலாமைம
முகத்தினற்றொழுதுமாநதமுதல்வனம்முனிவனுக்கு
மிகத்திருவுறுமலோபாமுத்திரையென்னுமின்னை. (உங)

உதிதருமிடபதீர்த்தக்கரையிலினியநாளிற்
றுதிபெறுமுனிவர்சூழத்தூயசெந்தழன்முன்னாக
விதிவழிமணஞ்செய்வித்தான்விளங்குமம்மன்றலாங்கப்
பதிவயினிகநாள்காறும்பாங்குறநடக்குமன்றே. (உச)

வேறு.

காவிரிதாதையாங்கவேரமாதவன்
பாவிரிபுகழ்ப்புகார்ப்பட்டினத்துறீஇக்
காவிரியந்நதிகலக்குஞ்சாகரப்
பூவிரிபுனற்குடப்பூரணைக்கணே. (உரு)

விதியினின்மூழ்கிவெண்ணீறுகண்டிகை
யிதமுறவேபுனைந்தைந்தெழுத்தெணி
நிதிமுதலாய்ப்பலவிமலவேதியர்
மதிமிகக்களித்திடமகிழ்வினீந்துபின். (உசா)

வேறு.

அற்புதத்திருச்சாய்க்காட்டினண்ணலைப்பூசித்தேத்தி
யுற்பவந்துடைப்பானுள்ளத்துன்னியாரணமுணர்ந்தோன்
றற்பெயரதனுலோர்நந்தனவனமியற்றியாங்குப்
பற்பகல்வைகிநோற்றுப்பரமர்தாணிழலிற்புக்கான். (உஎ)

வேறு.

உலகமெலாந்தொழுதேத்தும் பரிதிவ்வானவன்மருவுமோங்கு
கற்பி, னிலகுமெழின்மனைவாயையவன் மேனிவெம்மைபொறுதி
னையுங்காலை, யலகில்புகழ் நாரதப்பேர்முனிவரக்கண்டவணெடிஃ

கறையவன்றன், றிலகநுதற்சாயைநீ திருவளர்பூம்புகார்நகரந் கன்னிற்சென்றே. (உஅ)

பொன்னிமாநதிபாய்ந்துபுணரியையும்புனித முறப்புரிந்திட் டோங்கி, மன்னிவளர்சங்கமுகப்புனன்மூழ்கிச் சாய்க்காட்டின் வரதர்பொற்று, ஞன்னிமிகுமார்வத்தாற்பணிந்தேத்தி னுன்கண வன்மேனிவெம்மை, மின்னனையாய்நீசகிக்குந்திறன்மந்தாகினிச் சென்னிவிமலர்வார். (உகூ)

அய்யமுறுதேகென்னப் புகன்றநலவரனருளை முன்னிச்சா யை, யெய்யுமதனைங்கணையாற்றவ்கொழுநனிளைத்திடா திருக்கு மாறு, செய்யவெணித்தன்போலோர் மாதினைத் தன்மாயத்தாற் சிருட்டித்தாங்கே, வெய்யவன்பால்விடுத்தவன்றுனறியாமற்பு, கார்நகரைமேவினளால். (௩0)

மேவியருட்சங்கமத்திலாடிவோன்புகும்வேலைவிண்வாழ்வெ ப்யோன், றேவிமிகச்செயுமாயைத்திறமுமருந்தவமும்யாழ்முனி யாற்றேர்ந்தென், னுவியனையாள்புரியுந்தவம்யானுமியற்றுவலெ ன்றகத்திலுன்னிக், காவிரிசங்கமம்புக்கிம் மெனுவளவிற் காதலி யைக்கண்டான்மன்னோ. (௩க)

கண்டனகண்மணியே நிற்பிரிந்திரேனின்போலக் கடனஞ்சு ண்ட, கண்டனடியுளங்கொண்டிப்புண்ணியநீர்மூழ்கிச்சாய்க்கா ட்டின்மேவு, மண்டர்பிரான்றனையிந்துசேகரனைப் பூசித்திங்கரு ள்பெற்றுய்வே, னெண்டொடியேயெனப்புகலச் சாயைகேட் டுவகைமேலுவகைகொண்டாள் (௩உ)

பின்புதினகரதேவும்பிணைநிகர்கட்சாயையு மப்பெருகுதீர்த் தத. தன்பொடுநூல்விதிப்படியேயாடி வெண்ணீ றணிந்தக்கவா ரம்பூண்டே, யின்புபுனைசாய்க்காட்டினிறைவர்தமைப்பூசைபுரிந் திறைஞ்சிநின்று, மின்பொலிசெவ்வேணியனே விண்ணவர்க்காந ஞ்சுண்டவிமலாவென்று. (௩௩)

போற்றிநின்றாரவர்முன்னம்பொருப்பரையன் புதல்விபிடம் பொருந்தித்தோன்ற, வேற்றினிடத்தெம் பெருமானெழுந்தரு ளியினநினக்கென்வேண்டுமென்ன, நீற்றினவென்மனை சாயைநி

னைத்தவரமருள்புரிவைநிமலாவென்றே, சாற்றினனென்றாழிறை வன்சாயையைநின்னெண்ணமெவன்சாற்றுகென்றான். (௩௪)

மெய்யனே மெய்யவர்க்கு வெண்மதியோ டரவணியும்மே லோய்வெய்யோன், செய்யதிருமேனிவெப்புமுள்ளனகூர்மோடு சஞ்செய்யுந்தன்ப, மய்யசகிபாதடியா ளயர்கின்றேனெனச் சாயையறையவையன், வெய்யவன்றன்மேனியுறும்வெம்மையை நீயாற்றுதிறன்மின்னேயீங்தோம். (௩௫)

காசிபனுற்கதிரவன்றன் மெய்திருத்திக்கொடுத்திடுவோம் கவலாயென்றே, யாசிறவக்காசிபனை யழைத்தலரியங்கத்தைச்சா ணைசேர்த்துத், தேசுபெறமுண்டுகளைக்கடைந்துதேய்த்தன்பான் மெய்திருத்தென்றோதி, மாசகலிந்திரவிலிங்கத்துட்புகுந்தான் மடந்தையிடப்பாகன்மாதோ. (௩௬)

ஆரணமாகமமறந்த காசிபனமுனசவுதாவையாகருமூல, காரணஞ்சிவபெருமான்மொழிப்படியோர்கவினுறுசாணையின் கட்சேர்த்திச், சிரணவக்கடைந்துகூர்புரிந்திடுமுண்டுகள்யாவுந்தீ ர்த்துச்செய்பொன், வாரணவுந்தனச்சாயாதேவிமிகமனமகிழச் செய்தான்மன்னோ. (௩௭)

தேசமருமேனிபெறுசெம்பரிதிவானவனுஞ்செழுநீரோங்கி, வாசமுறவளர்கமலமலர்போலு மலர்வதனச்சாயைமாதும், நே சமுடன் றண்புகார்ச்சாய்க்காட்டினின்மலனை யிறைஞ்சிப்போ ற்றி, யாசகலுந்தம்பதிபுக்கிநதிரநாதனைச் சிந்தித்தருளால்வாழ்ந் தார். (௩௮)

வேறு.

மின்னுபொன்னுலகாண்டிடும்வேந்தனைப்பயந்த
மன்னுமாதவத்ததிதிதங்குரவனைவணங்கிப்
பொன்னெனும்பெயர்ப்புண்ணியாவுலகெலாம்பூத்த
கன்னிபாகனைக்கருதியான்றவஞ்செயநினைந்தேன். (௩௯)

அனையநோன்புதானடிகணீரேதன்பொருட்டென்னில்
வினையில்வெய்யராந்திதிமகார்விளைத்திடும்வெம்போர்
முனையிலென்மகார்முடிந்திடாதிருந்திடக்கொன்றை
புனையுமீறிலாப்புங்கவன்பால்வரம்பெறற்காம். (௪0)

மதியணிந்திடும்வரதனுர்க்கம்புவிமீதிற்
பதிகள்பற்பலவவற்றருந்தவமிகப்பலிக்கும்
பதியையான்றவமியற்றிடப்பணித்தருளென்ன
வதிதிகாசியின்மேம்படுநதலங்களாறவற்றுள். (சக)

மிக்கதாயதுவிளங்குசாய்க்காடதின்மேவித்
தக்ககாவிரிசங்கமம்படிந்துசாய்க்காட்டின்
முக்கணாயகற்பணிந்தருந்தவமுயன்றிடிலுன்
மக்கள்யாவருமடைந்திடாவரஞ்சிவன்வழங்கும். (சஉ)

என்றுதேசிகனியப்பவுமவனடியிறைஞ்சி
யன்றுகற்சுருத்திங்களுமவிர்மதியலரோ
டொன்றுமேல்வையுமுறுதலினும்பர்காடொருவிக்
குன்றவில்லிசாய்க்காடெனுந்தலப்பதியுற்றுள். (சங)

பொன்னிநீர்புகும்புனிதமார்சங்கமம்படிந்தே
மின்னுவேணியர்விமலர்சாய்க்காடர்தாள்வணங்கி
யன்னமென்னடையன்னையைக்கூவென்றகோதை
தனையும்பணிந்திந்திரன்றாய்தவம்புரிந்தாள் (சச)

வேறு.

புங்கவர்ப்பயந்தவன்னைபுனிதையைவாமங்கொண்ட
வங்கணன்றிருத்தாளுன்னியாற்றநாட்டவஞ்செய்காலை
மங்கையோர்பாகன்வெள்ளைமால்விடைமீதுதோன்றி
நங்கைநின்னெண்ணமென்னநவிலெனநவிலலுற்றாள். (சரு)

எங்கணாயகனேபோற்றியீறிலாமுதலேபோற்றி
சங்கராபோற்றிநாயேன்றனையர்தானவர்தம்போரின்
மங்கலுற்றிறவாவண்ணம்வரமருள்வரதவென்னத்
திங்கள்சேர்வேணித்தேவன்றிருவருள்புரிந்துசெப்பும் (சசா)

மகரமாதத்திலாதிவாரத்திலமைமாயோனுள்
புகல்விதிபாதந்தம்மின்முதனடுவீறதாக
தகுமருணோதயஞ்சார்சாற்றருத்தோதயத்தின்
மிகரிலாவிந்துவாரநேர்மகோதயத்தின்மன்றே. (சஎ)

மேடமாமதிமுன்னாகவிளங்குறுதிங்கடோறும்
பீடுறுமமைபிலல்லோன்பிறங்குபூரணைநன்னாளிற்

கூடுறுகிரகணத்திற்றலைவுசங்கமதீர்த்தத்தின்
றாடுவார்செய்தபாவமனைத்துந்தீர்ந்துய்வரன்றே (௪௮)

சாறுறுநாட்களிற்றையாடிக்கமிலமைசூடமீன்பௌவம்
தோற்றுயிருதயஞ்சோமசூரியகிரகணங்க
ளேற்றமுற்றிடுநாளாகுமிவற்றிற்றையமையின்மூழ்கி
நோற்றனையதனாலுன்றனோன்மையையாமிகமகிழ்ந்தோம். (௪௯)

மாதவற்சொடுபாலவேலைமதித்தகனிடத்திற்றோன்றுஞ்
சீதமாரமுதையுன்றன்செல்வர்கட்கேயீவிப்போம்
கோதிலவ்வமுதமுண்டுன்குமரர்களமரராவா
மாதுநீகவலலென்றேமாயவன்றன்னைநோக்கி. (௫௦)

சீரமார்கடல்கடைந்துகிளர்ந்தெழுமமுதந்தன்னை
யீரமார்முனிவானோர்க்கேயீவையென்றருள்புரிந்தே
யாரலர்கொன்றைமதிமரவுவெண்டலைகரந்தை
நீரவிராமதியஞ்சூடுநின்மலன்மறைந்தானன்றே. (௫௧)

சுந்தரவதிதிசாய்க்காட்டீசர்தாடொழுதுபோற்றி
மந்தரநாட்டிற்சென்றாளண்ணலாரருளினாலே
கந்தரமிறத்தன்றிம்பாற்கடல்கடைந்தமுதம்பெற்று
வந்தரன்முன்சாய்க்காட்டிலதிதிதன்மைந்தர்க்கீந்தான். (௫௨

இந்திரனாதிவானோரிறைவனதருளின்மாயோன்
றந்திடுமமுதமுண்டுசாவிலாத்தன்மைவாய்ந்தே
யந்திமேனியனைச்சாய்க்காட்டண்ணலைக்கருணைவெற்பைப்
பந்தனையறுப்பான்றன்னைப்பணிந்துவானடைந்துவாழ்ந்தார் ()

வேறு.

பொன்னனையதவமுறுகாசிபமுனிவன்பொருப்பரவம்புயல் பூங்கிள்ளை, மின்னனையமுலையல்குன்மிளிர்குழல்சொன்னுண்ணிடைசேர்விநதைமாதை, முன்னமணந்தசனியொடுமின்னலையுங்குரால்பருந்துமுதலாவுள்ள, மன்னுசிறைப்பறவையையுமருணனொடுகலுழனையுமகிழ்ந்துபெற்றான். (௫௪)

மருவுறுபூங்குழற்றாளநகையரம்பைதோளருணன்மருவியின்புற், றெருவையினுக்கரசராஞ்சம்பாதிசடாயுவெனுமிருவர்ப் பெற்றான், திருவுறுமச்சம்பாதிமேனுலகிற்சென்றதன்கட்சிறப்

பநோக்கி, வருகுவலீண்டெனப்பறந்துதினகரன்மண்டலத்தரு
ன்மருவுங்காலை. (௫௫)

ஆதவன்றன்கதிர்வெம்மைக்காற்றாதுபெருஞ்சிறையற்றயர்ந
தானாகிப், பூதலமேல்விழுந்தெங்கள்சிவபெருமான்பூங்கமலப
பாற்றுன்னி, மாதொருகூறுடையானேமதிபுனைசெஞ்சடை
யனேவரதாவென்றே. யாதரவாற்பணிந்தேத்துமவ்வேலை யந்த
த்தோர்வாக்குத்தோன்றி. (௫௬)

வேறு.

ஆடித்திங்களுமம்புலிபோடரி
கூடுநாளுமின்றூதலிற்கோதிலா
நீடுமண்ணினிலவுசம்பாதிநீ
மாடுபொன்சொரிகாவிரிமாகடல். (௫௭)

புகுமச்சங்கமப்பூம்புனலாடியே
மகிமையோங்குசாயாவனவள்ளலை
மிகுமன்பாற்பணிந்தேத்திலுன்மெய்ச்சிறை
யுகுதறேன்றிலாதோங்கித்தழைக்குமே. (௫௮)

இன்னதன்மையதன்றியுநின்னுள
முன்னும்யாவையுமுற்றுறுமேகென
மன்னுமன்பின்வயங்குசம்பாதியு
மன்னதானத்தடைந்தனனன்றரோ. (௫௯)

கழுகின்வேந்தன்கடலிடைக்காவிரி
யொழுகுமாவயினுற்றுவிதிப்படி
முழுகிச்சாயாவனத்துமுக்கண்ணனைத்
தொழுதுசூழ்ந்துதுதிபலசொல்லுமால். (௬௦)

காலகால கதிர்விது சேகர
நீலகண்ட நிராமய நின்மல
சூலமேணஞ் சுடர்மழுப்பாணிய
பாலலோசனபார்வதிபாகனே. (௬௧)

என்றுபோற்றிடுமேல்வையிருஞ்சிறை
துன்றிநீண்டுவளர்தரத்துன்பொரீஇ
யொன்றுமானந்தமுற்றுக்கழுகிறை
நின்றுமாதவநேர்ந்தனனோர்சிறை. (௬௨)

அளவினாளவனுற்றுமருந்தவக்
குளமகிழ்ந்துமையோர்மருங்கேய்தரக்
குளவிலோசனன்குண்டையிவர்ந்துறப்
புளகமெய்திக்கமூகிறைபோற்றினான் (சுஙு)

போற்றிநின்றவெருவைப்புரவலற்
காற்றவெவ்வுலகுஞ்செலுமாண்மையோ
டேற்றமேயபல்லூழியினுயுளீந்
தீற்றினம்பதமெய்துகென்றானிறை. (சுச)

வேறு.

செம்பாதிபொன்மேனியுமைக்களித்த சிவபெருமான்றேவர்
கோமா, னம்பாதி மூர்த்தியெனத் திகழிலிங்கத் திடைப்புகுந்
தானவிழ்புட்கெல்லாம், பப்பாதி பத்தியங்கொண்டளவில்பகல்
வாழ்வரமும்பரன்பாற்பெற்ற, சம்பாதிதவஞ்செய்தலஞ்சம்பாதி
வனமெனப்பேர்தழைந்ததன்றே. (சுரு)

வேறு.

மாதவன்புலிக்கால்பெற்றமாமுனிமன்னன்செய்த
கோதறுதவத்தின்வந்தோன்குழவியென்றழுமந்நாளின்
ஓதமாரலைபாலுண்டேயுமிழ்ந்தவனுலகுண்டோனை
நாதமார்மறைகளாய்ந்தேநாதன்முக்கணனென்றோர்ந்தோன். ()

பன்னுசைவாகமத்திற்பகர்விதிவழுவாதீசன்
பொன்னடிபூசைசெய்யும்புண்ணியனுபமன்யப்பேர்
மன்னுமாமுனிவனிந்நீர்மகிழ்ந்துதோய்ந்தருட்சாய்க்காட்டின்
முன்னவற்பணிந்துபோற்றிமுப்பகலருநோன்பாற்றி. (சுஎ)

அண்ணலார்திருச்சாய்க்காட்டிலமர்ந்தருளமலனார்பால்
எண்ணுறும்றுபான்மும்மைநாயனாரிந்நிலத்திற்
பண்ணியதிருத்தொண்டோதும்பரிசொடுமெந்தனூன்றும்
வண்ணமார்வெள்ளிக்குன்றில்வசித்திடுவரமும்பெற்றான். (சுஅ)

கண்ணனிப்புனலிற்றோய்ந்துகனிதருமன்பினாலே
யெண்ணுறுசாம்பன்றன்னையீன்றனனென்றாழ்மூழ்கிட
புண்ணியநான்முன்சொற்றபுகழ்மனுவேந்தற்பெற்றான்
விண்ணவர்வேந்தன்பெற்றான்சயந்தனைவிதியின்மூழ்கி. (சுகூ)

மாயிருஞாலங்காத்தமன்னவன்முசுகுந்தப்பேர்ப
பாயிரும்புகழான்றோய்ந்துபசமர்சாய்க்காடனார்தஞ்
சேயதாள்போற்றிவிண்ணிற்சென்றுவாசவற்குத்தெவ்வாந்
தீயவாளவுணர்ச்செற்றுத்திறலொடுவந்துவாழ்ந்தான் (எ௰)

நீலவண்டுகில்புனைந்துநிலவியபலதேவப்பேர்ச்
சீலனிப்புனலிலாடித்திருச்சாய்க்காட்டிறைவர்த்தாழ்ந்து
சாலநாட்டவம்புரிந்துதரியலர்க்கசனியேறுங்
காலனுங்கடுக்குநாஞ்சிற்கடும்படைபெற்றான்மன்னே. (எக)

குரக்கினக்கோவாம்வாலிகொழுங்கதிர்மணிகொழிக்குந்
தரக்கமார்கடலிற்பொன்னிசீர்சங்கமுகத்தின்மூழ்கி
மருக்கமழ்சடையர்சாயாவனத்தர்தாளன்பிற்போற்றி
யரக்கருக்கடலேறன்ன அங்கதகுமரற்பெற்றான். (எஉ)

அப்பெரும்பேறுமன்றியாற்றல்சேர்வாலிதனமு
னெப்பெருவலியினோருமெதிர்ந்துபோரியற்றினன்னோர்
துப்பினிற்பாதிகொள்ளுந்துங்கமார்வரமும்பெற்றா
னிப்பெருந்தீர்த்தமேன்மையென்னெனவிசைப்பன்யானே (எங)

தூயகாவிரிசெல்வேலைத்துறைவயினன்பாற்றோய்ந்து
நாயகன்றிருச்சாய்க்காட்டினம்பனைப்பணிந்துமிக்க
தாயநற்கதிசேர்ந்தோரையளவிடப்புகினாகாயத்
தேயதாரகையுமாற்றாவெல்லையவாகுமன்னே. (எச)

என்றுமாதவஞ்செய்சூதனியம்பலுமுனிவர்கேட்டு
நன்றெனமகிழ்ச்சிகூர்ந்துநயமுறச்சூதர்ப்போற்றிக்
குன்றுருப்புகாரினெய்திக்குலவுசங்கமதீர்த்தத்தி
லொன்றுறுமன்பான்மூழ்கியுத்தமச்சாய்க்காடெய்தி. (எரு)

இந்திரநாதன்பொற்றாளிறைஞ்சிமுன்னிறைவன்சொற்ற
தந்திரவிதியாலாதிசைவரைக்கொடுபூசித்தே
மந்திரமறையாற்போற்றிவையமீரேழுமீன்ற
சுந்தரமிகுகூவென்றகோனத்தாடொழுதுபோற்றி. (எசு)

டற்பலவரங்கள்பெற்றுப்பல்லவனேசராதி
நற்பிரியாவிடங்கரகத்தீசர்நாகநாதர்
சிற்பரமுத்தியப்பர்திருமேனியழகநாதர்
சொற்பெறுசங்கமேசர்துலங்குதாந்தோன்றுமீசர் (எஎ)

"மைபலகணேசர்முன்னுளலப்பிலாவெஞ்சூர்க்கொன்று
கயபசநாடுதொத்தகந்தவேளின்னோர்கோட்ட
டிறபுறப்பணிந்துபோற்றியமர்ந்தனைமிசக்கானெய்தி
யற்புதச்சாய்க்காட்டீசரடியிணைகருதிநோற்றார் (எஅ)

காசினிமிகவும்வாழி கருதுசாய்க்காடுவாழி
வாசவன்வாழியன்பர்மாமுனிக்கணங்கள்வாழி
தேசுயர்புராணம்வாழிதிகழுமாமுகில்கள்வாழி
பேசுநான்மறையும்வாழிபிறங்குநாலனைத்தும்வாழி (எகூ)

சாயாவன்புராணம் முற்றுப்பெற்றது.

---

ஆ சருக்கம் கo - க்கு செய்யுள் சகூஉ.

திருச்சிற்றம்பலம்.

---

உ

## சருக்கசங்கிரகம்.

---

ஆதியில் ஒரு கற்பத்திலே உலகிலுள்ள ஆன்மாக்கள், செய்கின்ற பாவங்களைப் போக்குதற்கு மார்க்கமில்லாதிருந்த தினால், பூமிதேவி பாரம் பொறுக்கமுடியாமல் பிரமதேவரிடத் திற்சென்று சொல்ல, பிரமதேவர் விஷ்ணுமூர்த்தியிடத்திற் சொல்ல விஷ்ணுமூர்த்தி திருக்கைலாசத்திற் சென்று, சிவபெருமானை நோக்கி ஆயிரவருடம் தவம்புரிய, சிவ பெருமான் இடபவாகனத்தின் மீதெழுந்தருளிவந்து "திருமாலே! உனக்குவேண்டும் வரம்" யாதென்ன, திருமால் சுவாமி! ஆன் மாக்கள், செய்கின்ற பாவங்களைப்போக்குதற்கு ஓர்மார்க்கம் செய்தருளவேண்டுமென்ன, சிவபெருமான், விஷ்ணுவே! வேதம ஆகமம் புராணம் ஸ்மிருதி முதலியவெல்லாம் மலைவடிவங்கொ ண்டிருக்கின்றன. அவைகளைத் தீர்த்தவடிவமாகச் செய்கின் றோம். அத்தீர்த்தத்தில் மூழ்கினால் உயிர்களெல்லாம் பாவத் தை நீக்கிக்கதியிற்சேரும், என்று சொல்லியருளி, மலைவடிவா யிருந்த வேதமுதலியவற்றைத் தீர்த்தவடிவாய்ச் செய்தனுப, அத்தீர்த்தம், எண்ணில்லாத யோசனை யகலமாய்ப் பரவி, அலை

ளை வீசிக்கொண்டு வருதலைக்கண்டு, சிவபெருமான் அதனை சூக்குமவடிவமாய்ச் செய்தருளினர். பின்பு அத்தீர்த்தம், ஒரு பெண்வடிவங்கொண்டு, கயிலாயத்திலும், வைகுந்தத்திலும், சத்தியலோகத்திலும் சஞ்சரித்துக்கொண்டிருக்கும்போது சத்தியலோகாதிபராகிய பிரமதேவரிடத்துச் சென்றஅகத்தியமுனிவர் அப்பெண்ணைக்கண்டு விவாகஞ் செய்துகொள்ளுதற்கு விரும்பினர். பிரமதேவர் அதனையறிந்து, அகத்தியனே! இப்பெண்ணை உன் கடத்தில் வைத்துக்கொண்டு போவாயாகவென்று சொல்ல, அவ்வாறே அகத்தியமுனிவர் அப்பெண்ணைக் கடத்தில்வைத்துக்கொண்டுவந்து சையகிரியின் உச்சியில் அந்தக்கடத்தை வைத்தார்.

சையகிரியில் முற்காலத்தில் பலமுனிவர்கள் ஒரு பலாசமர நீழலில் வசித்துக்கொண்டிருந்தார்கள். இந்திரன் யாகத்தின்பொருட்டு அந்தப் பலாசமரத்தை வெட்டுதலும், முனிவர்கள் கோபங்கொண்டு இந்திரனே! உனக்கு அரசு ஒழியக் கடவதென்று சபித்தார்கள். இந்திரனுங் கோபங்கொண்டு முனிவர்களே! குற்றமில்லாத என்னைக் குற்றமுள்ளவனாக எண்ணிச்சபித்தமையால், நீங்கள் இம்மலையில் மூங்கிலாகக் கடவீர்களென்று சபித்தான். முனிவர்கள் இந்திரனை யுபசரித்து, வேந்தனே! எங்களுக்கிட்ட சாபம் நீங்கும் வழியாதென்றுகேட்க, இந்திரன் அகத்தியமுனிவர் கடத்தினின்று வரும்தீர்த்தத்தினால் உங்களுக்கிட்ட சாபம் நீங்கும் என்றான். முனிவர்கள் இந்திரன் சாபப்படி சையகிரியில் மூங்கிலாயிருந்தார்கள் அகத்தியமுனிவர் வைத்த கடத்தின்மேல் ஒருகாகம்வந்து ஏறுதலும், அகத்தியமுனிவர் அதைக்கண்டு போ போ என்றார். அவ்வார்த்தையைக் கும்பத்திலிருந்த நதியாகிய பெண் தன்னைச் சொல்லியதாக நினைந்து நீர்வடிவாய்விரைவிற் பெருகி, கும்பத்தினின்றும் புறத்தில் ஓடினள். அந்தப் புண்ணிய தீர்த்தம் பாய்ந்தமாத்திரத்தில் முனிவர்கள் இந்திரனிட்ட சாபநீங்கிப் பழயவடிவமுற்றார்கள். பின்பு அந்நதி வேகமாய்ச்செல்லும்போது "கவேரமுனிவருடைய தவத்தின்பொருட்டு அம்முனிவர்க்குப்" புத்திரியாய்க் காவேரியென்னும் பெயரடைந்து, பின்பு நதிவடிவாகி, காவேரிப்பூம்பட்டினத்திற் சென்று சமுத்திரத்தோடு கலந்தது. காவேரிசங்கமமாகின்ற கடற்றுறையை நினை

ந்தவர்களும், மனதில் நினைந்தவைகளையெல்லாம் பெறுவார். அந்தச் சங்கமதீர்த்தத்திலே மூழ்கி பொன், வஸ்திரம், ஆபரணம், அரிசி, காய் முதலியவற்றைப் பன்னிரண்டு பிராமணர்க்குத் தானஞ்செய்தவர், பன்னிரண்டு பிறப்பிற்செய்த பாவத்தைப் போக்குவார். அந்தத்தீர்த்தக்கரையில் வைதீகப்பிராமணர்க்குத் தானம் கொடுத்தவர் பிரமலோகத்தை யடைவார். சிவப்பிராமணர்க்குத் தானங்கொடுத்தவர் திருக்கைலாசத்தை யடைவர். பிதிர்களுக்குத் திலதருப்பணஞ் செய்யின் சாயாவனேசுரர், எவ்வொன்றுக்குப் பதினாயிரவருடம் அப்பிதிர்க்களை வானுலகத்தில் வாழ்வித்தருள்வார். சிவபூசை செய்தவர்கள் சிவவடிவம் பெறுவார்கள். அகத்தியமுனிவர் காவேரியின்மேற்கோபங்கொண்டு காவேரிகலந்த சமுத்திரத்தைக் குடித்துவிடுவேனென்று, சையகிரியினின்று வரும்போது, மாயூரநாதரைப்பூசித்து வணங்கினர். மாயூரேசர் அகத்தியமுனிவர் கோபத்தையடக்கி இடபதீர்த்தக்கரையில் உலோபாமுத்திரையை மணஞ்செய்வித்தார். அகத்தியமுனிவர் உலோபாமுத்திரையோடு கூடி மகிழ்ச்சியுற்றார்.

காவேரிநதியின் பிதாவாகியகவேரமுனிவர், மாசிமாதத்துப் பௌர்ணிமையில் காவேரிசங்கமத்தில் ஸ்நானஞ்செய்து சாயாவனேசுரரைப் பூசித்துத் துதித்து ஓர் நந்தவனம் வைத்துப் பலநாள் தவம்புரிந்து சாயாவனேசுரருடைய திருவடிநீழலையடைந்தார். கவேரமுனிவர் தவஞ்செய்த இடம் கவேரவனம் எனப் பெயர்பெற்றது.

சாயாதேவியானவள் தன்னாயகனாகிய சூரியதேவனுடைய வடிவத்திலுள்ள கூரியமுண்டுகளையும் வெப்பத்தையும் சகிக்கலாற்றாது வருந்தும்போது நாரதமுனிவர், சாயாதேவியை நோக்கி, காவேரிப்பூம்பட்டினத்திற் சென்று காவேரி சங்கமத்தின்மூழ்கி சாயாவனேசுரரை வணங்குவையாயின், உன்கணவன்மேனியின் முண்டுகளையும் வெப்பத்தையும் சகிக்குந்தன்மையை அக்கடவுள் கொடுத்தருள்வாரென்று சொல்ல, சாயாதேவி தன்னாயகனாகிய சூரியதேவன் காமன்கணையால் வருந்தாமலிருக்கும்படி தன்போல் ஒருபெண்ணை மாயத்தால் சிருட்டித்து, நாயகன்பால் விடுத்து அவனறியாமல் காவேரிசங்கமத்

தையடைந்து நீராடப்புகுஞ் சமயத்தில் சூரியதேவன் தன்மே நிசெய்த மாயத்தையும் செய்கின்ற தவத்தையும் நாரதமுனிவ ரால‌றிந்து, பிரிதலாற்றாமல் காவேரிசங்கமத்தை யடைந்து ளைவிடைக்கண்டு என்கண்மணியே! உன்னை யான் பிரிகிகிறேன் டன்னைப்போல யானும் இத்தீர்த்தத்தின்மூழ்கிச் சாயாவனே ரரை வழிபடுகின்றேனென்று கூறாநலும், சாயாதேவி கேட ப் பெருமகிழ்ச்சிகொண்டாள். பின்பு சூரியதேவனுஞ் சாயா தேவியும் சங்கமதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து, சாயாவன ரதரைப்பூசித்து வணங்கித் துதிக்கும்போது சாயாவனேசு ர் இடபவாகனமேற்கொண்டு தோன்றி சூரியனே! உன் எண் மய்யாதென்று வினவ, சூரியன் சுவாமி! என் மனைவியெண் ணியவரத்தைக் கொடுத்தருளுவீர் என்று பிரார்த்திக்க, சாயா வனநாதர் சாயாதேவியைநோக்கி,உன்கருத்தியாதென்று கேட் ருள அவள் சுவாமி என்னுயகன் மேனியிலுள்ள வெப்பத் தையும் கூரியமுண்டுகளையும் சகிக்கலாற்றாமல் வருந்துகின்றே ன். அவ்வருத்தத்தை நீக்கியருள்வீரென்று பிரார்த்திக்கலும் வெபெருமான் சாயையே! உன்கணவன்மேனியின் வெப்பத்தை சகிக்கும் ஆற்றலை உனக்குக்கொடுத்தோம். காசிபமுனியால் ன்கணவன்மேனியைத் திருத்திக்கொடுப்போம். கவலை நீங்கு யென்று சொல்லியருளிக், காசிபரை யழைத்து சூரியன்வடி பத்தைச் சாணையிற்சேர்த்துத் திருத்திக்கொடுப்பாயாக வென் சொல்லியருளி இந்திரலிங்கத்துட் புகுந்தருளினார். பின்பு சிபமுனிவர் சூரியனைச்சாணையிற்றேய்த்துக் கூரியமுண்டுகளை போக்கி, சாயாதேவி மகிழும்வண்ணம் செய்தார். சூரியதே னும் சாயாதேவியும் இந்திரேசுரரை வணங்கித்துதித்து தம் தியிற் புகுந்து வாழ்ந்தார்கள்.

அதிதியானவள் குருவாகிய வியாழபகவானை வணங்கி வாமி! அடியேன் புத்திரராகிய தேவர்கள் "திதி புத்திரராகிய சுரர்கள் விளைவிக்கும் கொடும்போரிலே" யிறவாதவண்ணம் ரம்பெறுதற்குச் சிவபெருமானை நோக்கியான்தவஞ்செய்யநினை தேன். தவம்விரைவிற்பலிக்குஞ் சிவதலத்தைச் சொல்லியரு ளவீரென்று கேட்க, வியாழபகவான் அதிதியை நோக்கி காசி ின் மேற்பட்டதலங்கள் ஆறு. அவை திருவெண்காடு, திரு

வையாறு, கௌரிமாயூரம், திருவிடைமருதூர், திருவாஞ்சியம் சாயாவனமும் என்பவைகளாம். இவ்வாறனுள்ளும் உத்தமோத்தமமானது சாயாவனமாம். ஆதலினால் நீ! சாயாவனத்தையடைந்து காவேரிசங்கமத்திலே ஸ்நானஞ்செய்து, சாயாவனநாதரை வணங்கித்துதித்துத் தவஞ்செய்வாயாயின் உன்மைந்தர்களுக்குமரணமில்லாத வரத்தைச் சாயாவனேசுரர் கொடுத்தருள்வார். நீ அத்தலத்தே சென்று தவம் புரிவாயென்றார். அதனைக்கேட்ட அதிதியானவள் அன்றையத்தினம் தையமாவாசையாதலால் மகிழ்ச்சியுற்று வந்து, காவேரிசங்கமத்தில் ஸ்நானஞ்செய்து சாயாவனநாதரையுங் கூவென்றகோதையாரையும் வணங்கிப்பலநாள் அருந்தவம் புரிந்தாள். சாயாவனநாதர் உமாதேவியாரோடும் இடபவாகனத்தின்மீதெழுந்தருளிவந்து, அதிதியே! உனதருந்தவத்திற்கு மகிழ்ந்தோம். உனக்கு வேண்டும் வரங்களைக் கேட்பாயாக வென்று சொல்லியருளாலும், அதிதி வணங்கித்துதித்து எம்பெருமானே! நாயேன் மைந்தர்கள் "அசுரர்கள் போரில்" இறவாத வரத்தையளித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தாள். சிவபெருமான் அதிதியை நோக்கி "தைமாதத்தில் ஞாயிற்றுக்கிழமையில் அமாவாசையின் முதலும திருவோண நக்ஷத்திரத்தின் நடுவும் விதிபாதயோகத்தின் இறுதியும் அருணோதயமும் பொருந்துகின்ற அருத்தோதயததிலும், மேற்கூறியவற்றுள் ஞாயிற்றுக்கிழமை நீங்கித் திங்கட்கிழமை சேரும் மகோதயத்திலும், சித்திரைமாதமுதற் பன்னிரண்டு மாதத்து அமாவாசையிலும், பௌர்ணிமையிலும், சூரிய சந்திர கிரகணத்திலும் இந்தச்சங்கமுக தீர்த்தத்திலே மூழ்கினோர்கள் செய்த பாபங்கள் நீங்கிக்கதியடைவார்கள். மேற்சொல்லியகாலங்களிலே தையமாவாசையும் ஆடியமாவாசையும் மாசிப்பூரணையும் பங்குனிப்பூரணையும் சூரியசந்திர கிரகணமும், அருத்தோதயமும், மகோதயமும் உத்தமபுண்ணியகாலங்களாகும்" நீ உத்தம புண்ணிய காலமாகிய தையமாவாசையில் மூழ்கித் தவஞ்செய்தாய் அதனாலுன்னோன்பை மிகவுமகிழ்ந்தோம். திருமாலைக்கொண்டு பாற்கடலைக்கடைந்து அக்கடலிடத்துத் தோன்றும் அமுதத்தை யுன்மைந்தர்க்கே கொடுப்பிப்போம். அந்தவமுதத்தை யுண்டு உன்மைந்தர்களாகிய தே

வர்கள் மரணமற்றவராவார்கள். நீ கவலையுறாதே யென்று சொல்லியருளித் திருமாலைநோக்கி, பாற்கடலைக்கடைந்து அங்கே தோன்றும் அமுதத்தைத் தமையுள்ளவர்களாகிய தேவர்களுக்கே கொடுப்பாயாகவென்றுரைத்து இந்திரலிங்கத்திலே புகுந்தருளினார். அதிதி சாயாவனநாதரைத் தொழுது வானுலகத்தையடைந்தாள். திருமாலானவர் பாற்கடலைக்கடைந்து அதிற்றோன்றிய அமுதத்தைக் கொண்டுவந்து சாயாவனநாதர் சந்நிதியில் தேவர்களுக்குக் கொடுத்தருளினார். தேவர்கள் அமுதத்தையுண்டு மரணமற்றவர்களாகி சாயாவனநாதரைப் பணிந்து போற்றி விண்ணுலகத்தை யடைந்து வாழ்ந்தார்கள்.

காசிபமுனிவர் விநதையென்பவளை மணந்து "இடிமின்னல், என்பவற்றையும் கோட்டான், பருந்து முதலாக உள்ளபறவைகளையும், அருணன், கலுழன் என்பவர்களையும்" பெற்றார். அருணன் அரம்பையைச் சேர்ந்து சம்பாதி சடாயுவென்னும் இருவரைப்பெற்றான். சம்பாதி "மேலுலகத்திற்சென்று அங்குள்ள அற்புதங்களைக்" கண்டு வருவேன் என்று பறந்து சூரியமண்டலத்தருகிற் செல்லும்போது சூரியனுடைய கிரணவெம்மைக்காற்றாது சிறகுகளை யிழந்து பூமியில் விழுந்து வருந்திச் சிவபெருமான் திருவடிகளைத் தியானித்துத் துதித்தான். அச்சமயத்தில ஆகாயத்திலோர் திருவாக்குத் தோன்றி, சம்பாதியே! இவ்விடம் மயானமாதலால் காவிரிப்பூம்பட்டினத்திற்சென்று காவேரிசங்கமத்தின் மூழ்கிச் சாயாவனேசுரரைத் தரிசிப்பாயாயின் உன் சிறகுகள் முன்போல்வளரும். அத்தலத்திற் றவஞ்செய்வாயாயின் உன்னெண்ணமுழுதும்முற்றுப்பெறும் இப்பொழுதே நடக்குக என்றது. சம்பாதி அவ்வார்த்தையைக் கேட்டுச் சென்று காவேரிசங்கமத்தின் மூழ்கிச் சாயாவனேசுரரைத்தொழுது வலம்புரிந்து துதிக்கும்போது சிறகுகள் முன்போலவளர்ந்தன. பின்பு சம்பாதி அத்தலத்தில் ஓரிடத்திலிருந்து, எண்ணில்காலந் தவம்புரிந்தான். சாயாவனேசுரர் கூவென்ற கோதையாரோடும் இடபவாகனத்தின்மீதெழுந்தருளிச் சம்பாதியை நோக்கி உன்றவத்திற்கு மிகமகிழ்ந்தோம். எல்லாவுலகத்திற்கும் போய்வரும் வன்மையும், பல்லூழிகாலமாகிய ஆயுளும் உனக்குக் கொடுத்தோம், முடிவில் நம்பதத்தினை அடை

வாயென்று திருவாய்மலர்ந்தருளி இந்திரலிங்கத்திற் புகுந்தரு ளினார். சம்பாதி தவஞ்செய்தஇடம் சம்பாதி வனமெனப்பெ யர்பெற்றது.

உபமன்னியமுனிவர் இந்தக்காவேரிசங்கமத்தில் ஸ்நா னஞ்செய்து சாயாவனேசுரரைப் பூசித்து அக்கடவுளிடத்தே அறுபத்துமூன்றுநாயனார் சரித்திரத்தைச் சொல்லுதற்கும், என்றென்றுந் திருக்கயிலாயத்தில் வசித்தற்கும் வரம்பெற்றார். கிருஷ்ணர் இச்சங்கமுகதீர்த்தத்தின் மூழ்கி சாயாவனேசுரரை த்தரிசித்துச் சாம்பனைப்பெற்றார். சூரியன் இத்தீர்த்தத்தின் மூ ழ்கிசாய்க்காட்டண்ணலைத்தொழுதுமனுவைப்பெற்றார். இந்திர ன்இத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சாயாவனேசுரரைப்போற் றிச் சயந்தனைப்பெற்றான். முசுகுந்தச்சக்கிரவர்த்தி இச்சங்கம தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து சாயாவனேசுரரைத் தொழுது விண்ணுலகத்திற்சென்று இந்திரனுக்குப் பகைவராகிய அசுர ர்களைக்கொன்று செயம்பெற்று வந்து வாழ்ந்தான். பலராமர் இத்தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து சாய்க்காட்டீசரைப்போற்றி ப்பலநாள் தவஞ்செய்து பகைவரஞ்சும் கலப்பைப்படையைப் பெற்றார். வானரவேந்தனாகிய வாலிஇச்சங்கமதீர்த்தத்திலேமூ ழ்கி சாய்க்காட்டண்ணலைப் போற்றி அங்கதனைப் பெற்றான். அன்றியும் அவ்வாலியானவன் தன்னோடெதிர்ந்து போர்செய் வோர் வலிமையிற்பாதி வலிமையைத் தான்கொள்ளும் வரத் தையும் பெற்றான். இத்தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து சாய்க் காட்டிறைவரைப்போற்றி நற்கதி சேர்ந்தோரை யெண்ணப்பு கின் நக்ஷத்திரங்களும் உறையிடப் போதாதனவாம் என்று சொல்லிய சூதமாமுனிவரை நைமிசாரணியமுனிவர்கள் வணங்கித்துதித்து காவிரிப்பூம்பட்டினத்தைச்சேர்ந்து, காவேரிசங் கமத்தில் ஸ்நானஞ்செய்து திருச்சாய்க்காட்டையடைந்து இந் திரேசுரரைத் தொழுது ஆதிசைவரைக்கொண்டு பூசித்து வே தங்களாற்றுதித்துக் குவென்றகோதையம்மையாரையும் வணங் கிப்போற்றி பற்பல வரங்களைப் பெற்றுக்கொண்டு பல்லயனேச